வெளியீடு எண் 119.

# சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்

குறிப்புரையுடன்









திருவாவடுதுறை ஆதீனம்

1958

உ

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறைஆதீனத்து

இருபதாவது குருமஹாசந்நிதானம்

# ஸ்ரீ அம்பலவாணதேசிகமூர்த்திகள்

ஏழாவது

# குருபூஜைவிழாமலர்.

ஏவிளம்பி — பங்குனி — திருவாதிரை

28—3—58.

குருபூஜைவெளியீடுகள்:

| | | |
|---|---|---|
| (1) | திருமந்திரசிந்தனை | 1952 |
| (2) | திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ் | 1953 |
| (3) | ஸ்ரீ கச்சியப்பமுனிவர் பிரபந்தங்கள் | 1954 |
| (4) | க்ஷேத்திரக்கோவைப்பிள்ளைத்தமிழ் | 1955 |
| (5) | இரத்தினசபாபதிமாலை | 1956 |
| (6) | திருத்தொண்டர்மாலை | 1957 |

சிவபரிபூரணம்—திருவிடைமருதூர்.

விகிருதி—பங்குனி—திருவாதிரை. 1951.

வெளியீடு எண் 119

உ
சிவமயம்

# சேயூர் முருகன்பிள்ளைத்தமிழ்

( குறிப்புரை முதலியவற்றுடன் )

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறைஆதீனத்து
இருபத்தொன்றுவது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்
கட்டளையிட்டருளியபடி
வெளியிடப்பெற்றது

திருவாவடுதுறை

1958.

# இப்புத்தகத்தில் அடங்கியவை

---

1. முகவுரை

2. ஆசிரியர்வரலாறு

3. தலவரலாறு

4. செய்யுள் முதற்குறிப்பகராதி

5. பிள்ளைத்தமிழ்நூல்

6. குறிப்புரை முதலியன

உ
சிவமயம்

# வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

—ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றாவது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்

உ
சிவமயம்

# முகவுரை

---

திருச்சிற்றம்பலம்

உருகுமனத் தடியவர்கட் கூறுந் தேனே
 உம்பர்மணி முடிக்கணியை உண்மை நின்ற
பெருகுநிலைக் குறியாளர் அறிவு தன்னைப்
 பேணியஅந் தணர்க்குமறைப் பொருளைப்பின்னும்
முருகுவிரி நறுமலர்மே லயற்கும் மாற்கும்
 முழுமுதலை மெய்த்தவத்தோர் துணையை வாய்த்த
திருகுகுழல் உமைநங்கை பங்கன் தன்னைச்
 செங்காட்டங் குடியதனிற் கண்டேன் நானே.

திருச்சிற்றம்பலம்

சேயூர் முருகன் பிள்ளைத்தமிழாகிய இப்பிரபந்தத்தை இயற்றிய கவிஞர் பெருமான் அந்தகக்கவி - வீரராகவ முதலியார் என்பவர். இவருடைய புறக்கண் முன்னை வினைப்பயனால் இழக்கப் பெற்றாராயினும், அகக்கண்ணால் உண்டாகிய அநுபவம் உம்மைப் பெருந்தவத்தால் அவருக்கு மிக்கு விளங்குவதாயிற்று. இவர்உள்ளம் கவிதையுலகத்திலே இடைவிடாது சஞ்சரிக்கும் பெருமை நிறைந்ததென்பதை இவர் இயற்றிய நூல்களால் எளிதில் அறியலாம்.

பிள்ளைத்தமிழ் என்பது தமிழில் உள்ள தொண்ணூற்றாறு வகைப் பிரபந்தங்களுள் ஒன்றாம். பிள்ளைப்பாட்டு எனவும் வழங்கும். பாட்டுடைத்

தலைவரைக் குழந்தையாகப் பாவித்துச் செவிலித்தாய் முதலியோர் காப்பு முதலிய பத்துப்பருவங்களுக்கு ஏற்றசெயலைக் கூறிப்பாராட்டுவதாகப் புலவர் பெரு மக்களால் பாடப்படுவது இந்தப்பிரபந்தம். இஃது ஆசிரியவிருத்தத்தால் இயற்றப்பெறுவது. கடவுளரை யேனும், ஆசிரியரையேனும், உபகாரிகளையேனும் குழந்தையாகவைத்து இது பாடப்படும். தத்துவாதீத ராகிய சிவபெருமானைப் பிள்ளைப்பருவத்திலே வைத்துப் பிள்ளைத்தமிழ் செய்வதில்லை. விநாயகக் கடவுள், சுப்பிரமணியக்கடவுள், உமாதேவியார், திருமால் முதலிய கடவுளரைப்பற்றிப் பிள்ளைத்தமிழ்கள் பல உள்ளன. அநுமார்மீதும் பிள்ளைத்தமிழ் இயற்றினர் சீகாழி – அருணாசலக்கவிராயர். ஆசிரியரைப்பற்றிப் பாடியது அம்பலவாணதேசிகர் பிள்ளைத்தமிழ். உப காரிகளைப்பற்றிப் பாடியவை குலோத்துங்கசோழன் பிள்ளைத்தமிழ், சிவந்தெழுந்த பல்லவராயன் பிள்ளைத் தமிழ் முதலியன.

இனி,

**“ மக்கண்மெய் தீண்டல் உடற்கின்பம் மற்றவர்**
**சொற்கேட்ட லின்பம் செவிக்கு ”**

என்னும் திருக்குறட்பாவுக்கேற்ப, தீண்டல் உடற் கின்பமும், சொற்கேட்டல் செவிக்கின்பமும் பயத்தல் போல, குழந்தைகளின் விளையாட்டைக் காண்டலும் கண்ணுக்கின்பமாம். பெறலரும் பிள்ளையைப் பெற்றோர் “குறுகுறு நடந்து சிறுகை நீட்டி, இட்டும் தொட்டும் கௌவியும் துழந்தும், நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்” விளையாடுதல் முதலிய செயல் களைக் குழந்தைகளிடத்திலே கண்டு அநுபவிக்க

அவரிடைத் தோன்றும் ஒருதலை இன்பத்தினையே இங்கேவைத்துக் கூறப்படுவது.

இப் பிள்ளைப்பிரபந்தம், புறப்பொருள் வகையாகிய பாடாண்டிணையில் "குழவி மருங்கினும் கிளவதாகும்" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால் கூறப்பட்ட காமப்பகுதியின்பாற்பட்டு மக்கட்குழவிக்கு உரித்தாக வழங்கப்படும். ஆயினும், ஒரோவழித் தெய்வத் தோற்றமாகிய மக்கட்குழவியின் பருவத்தை ஆரோபித்தலால் அக்குழவியோடு ஒற்றுமையுடைய தெய்வத்துக்கும் உரியதாக இது வழங்கப்படும். தமிழ் என்பது ஈண்டுப் பிரபந்தம் என்னும் பொருள் பயக்கும். பிரபந்தம் - நூல். "இளம்பருவ விளையாட்டை நோக்குழித் திருவுருவிடத்து ஆசை மிகுதியுண்டாம்" ஆதலால் இவ்வாதீனத்துத் திராவிடமாபாடியகாரர் ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் அமுதாம்பிகை விடயமாக ஒருபிள்ளைத்தமிழும், செழுங்கழுநீர் விநாயகர் விடயமாக ஒருபிள்ளைத்தமிழும் அருளிச்செய்தனர். மாறுத இளமையும், அழகும் உடையராகலின் முருகவேளைக் குறித்துப் பல ஆசிரியரும் பிள்ளைத்தமிழ் இயற்றுவாராயினர். எத்தனை பிள்ளைத்தமிழ் நூல்களை நாம் படித்தாலும் கற்பனை முதலியவற்றில் ஒன்றையொன்று விஞ்சி நின்று கவிஞர்களின் புலமைப் பெருக்கைக் குன்றிலிட்ட தீபம்போல விளங்கக் காட்டும். ஒரு செய்தியை எடுத்துக்கொண்டு புலவர் பலரும் பலபடியாகப் பாராட்டித் தத்தங் கற்பனைத் திறனை வெளிப்படுத்துவர். அவரவர் உள்ளத்திலே மாறுதூறும் கற்பனையூற்றின் வற்றா நிலையினை அறிந்து அரசரும், பிரபுக்களும், அறிவுடைப் பெருமக்களும் கவிஞரைப் பாராட்டி உபசரிப்பர்; பாதுகாப்பர்.

இனி, ஆண்பாற் பிள்ளைத்தமிழ், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என இஃது இருவகைப்படும். பாட்டுடைத் தலைவராகிய இக்குழந்தையைப் பாதுகாக்க எனத் தெய்வங்களை வேண்டுவது காப்புப்பருவம். திருமால் காத்தற்கடவுள் ஆகலின், இப்பருவத்தின் முதற் செய்யுளைப் பெரும்பாலும் திருமால் காப்பாகவே அமைத்தல் தொன்றுதொட்ட மரபு. குழந்தை பிறந்த ஏழாவது நாள் காப்பிடுதல் என்ற உலக வழக்கத்தையொட்டி இலக்கிய வழக்கிலும் இஃது அமைந்திருக்கலாம் போலும்.

" காப்பொடு செங்கீரை தால்சப் பாணி
யாப்புறு முத்தம் வருகவென் றன்முதல்
அம்புலி சிற்றில் சிறுபறை சிறுதேர்
நம்பிய மற்றவை சுற்றத் தளவென
விளம்பினர் தெய்வ நலம்பெறு புலவர் "

என்பது பன்னிருபாட்டியல். இம்முறைமாறி, 'காப்புத் தால் செங்கீரை' என வருதலும் உண்டு. மேலே கண்ட முறைமைபற்றியே ஆண்பாற் பிள்ளைத்தமிழ் பாடப்படும். பெண்பாற் பிள்ளைத்தமிழாயின் இறுதி மூன்று உறுப்புக்களையும் நீக்கி, அம்மானை நீராடல் ஊசல் ஆகிய மூன்றனையும் சேர்த்துப் பத்துப் பருவமாக்குவர். அம்மானையை நீக்கிக் கழங்காடுதலைக் கூறுவதும் உண்டு. இனி,

" திருமா லரனே திசைமுகன் கரிமுகன்
பொருவேல் முருகன் பருதி வடுகன்
எழுவகை மங்கையர் இந்திரன் சாத்தன்
நிதியவன் நீலி பதினொரு மூவர்
திருமகள் நாமகள் திகழ்மதி என்ப
மருவிய காப்பினுள் வருங்கட வுளரே "

என்னும் பன்னிருபாட்டியல் சூத்திர முறைப்படியே காப்புப்பருவத்தைக் கவிஞர் அமைப்பர். சில பெரியோர் இம்முறையை மாற்றிப் பிறவாறும் அமைத்திருக்கின்றனர். இப்பிள்ளைத்தமிழிலே கவி வீரராகவர் திருமால், வன்மீகநாதர், முத்துவாளியம்மையார், கங்காதேவி, சித்திவிநாயகர், சரவணப்பொய்கை, வேலாயுதம், வைரவக்கடவுள், கார்த்திகைத்தாயர், பிரணவப்பொருள் என்பவர் பாட்டுடைத் தலைவரைக் காக்கஎன அமைத்துள்ளார். இந்நூலின் பாட்டுடைத் தலைவர் முருகக்கடவுளாகலின் அப் பெருமானைக் காப்பில் அமைத்திலர். இக்காப்புப்பருவம் மூன்றுந் திங்களிற் கூறப்படும்; இரண்டாம் திங்கள் என்பாரும் உளர்.

2. **செங்கீரைப்பருவம் :** பொருள் தெரியாத ஒலியைஎழுப்பும் பருவத்தைக் குறித்தது இதுஎன்பர். கீர் - சொல். பெரியவாச்சான்பிள்ளை இதனை 'நிருத்த விசேடம்' என்பர். ஒருகாலை முடக்கி, ஒருகாலை நீட்டி, இருகரங்களையும் நிலத்திலே ஊன்றித் தலை நிமிர்த்தி, முகம் அசைத்து ஆடும் பருவமே இஃதாம். இஃது ஐந்தாம்மாதத்தில் கூறப்படும்.

3. **தாலப்பருவம் :** குழந்தைகளைத்துயிலச் செய்வோர் தம் நாவை அசைத்துப் பாட்டுப்பாடுதல் வழக்கம். தாலாட்டு என்பது மருவித் தால் என நின்றது. "தாலோ தாலேலோ" எனப் பாடலின்இறுதியமைப்பு விளங்கும். இஃது எட்டாம் மாதத்தில் இயம்பப் படுவது.

4. **சப்பாணிப்பருவம்:** சப்பாணி கொட்டும்படி குழந்தையிடம் கூறுவதாக இது அமைக்கப்படும்.

கையோடு கையைச் சேர்த்துத் தட்டுதலே இது. ஸ: பாணி சப்பாணி ஆயிற்று. இஃது ஒன்பதாம் மாதத்தில் கூறப்படும்.

5. முத்தப்பருவம் :தாயாரும் பிறரும் 'முத்தம்தா' எனக் குழந்தையை வேண்டுவதாகக் கூறுதல் இப் பருவ அமைப்பு. இதுபதினோராம் மாதத்தில் கூறப் படும்.

6. வருகைப்பருவம் : தத்தித் தத்தித் தளர்நடை யிட்டு வரும் குழந்தையை வா என அழைப்பதாகப் பாடுவது இப்பருவச் செய்தி. இது பன்னிரண்டாம் மாதத்திலே கூறப்படும்.

7. அம்புலிப்பருவம் : அம்புலியை நோக்கி நீ குழந்தையுடன் ஆடவா என அழைப்பதாக இப்பரு வம் கூறப்படும். இந்தப்பருவத்தில் அம்புலியைக் குழந்தையோடு சமப்படுத்தியும், பேதப்படுத்தியும், வண்மை நிலையை எடுத்துச் சொல்லியும் அழைக்கப் படுவதுடன் வாராவிடில் இன்னது செய்வன் எனத் தண்டத்துரைகூறி அச்சுறுத்தியும் செய்திகள் அமைக் கப்படுவன. இது பதினெட்டாம் மாதத்தில் கூறப் படுவது. சில சில நூல்களில் சில சில பகுதிகள் பாடு வதில் வருத்தமுண்டாம். இப்பிரபந்தத்திலே சாம பேத தான தண்டவகையை வைத்தமைத்தல் கடின மெனக் கருதிக் கவிஞர் 'அம்புலி புலி' என்றும், புலமையின் எல்லையை அளப்பதற்குரிய கருவியாக அம்புலிப்பருவம் கொள்ளப்படும் என்றும் கூறுவர். உலா என்னும் பிரபந்தத்திலே பெதும்பைப்பருவம் புலி எனக் கூறப்படும்.

8. **சிற்றிற்பருவம்:** சிறுவீடுகட்டி விளையாடும் சிறுமியர் தாம் இழைத்த சிற்றிலைப் பாட்டுடைத் தலைவர் காலால் அழித்துச் சிதைக்கத் தொடங்குவதைச்சுட்டி 'எங்கள் சிற்றிலை அழியா தொழிக' என்று வேண்டிநிற்பதாக இப்பருவம் அமைக்கப்படும். இஃது இரண்டாம் ஆண்டிலே கூறப்படுவதாம்.

9. **சிறுபறைப்பருவம்:** பாட்டுடைத்தலைவராகிய குழந்தையைச் சிறுபறை கொட்டியருளும்படி செவிலியர் வேண்டுவதாக இப்பருவம் அமைக்கப்பெறும். இது மூன்ருவது ஆண்டிலே மொழியப்பெறும்.

10. **சிறுதேர்ப்பருவம்:** சிறுதேர் உருட்டி விளையாடும்படி பாட்டுடைத் தலைவராகிய குழவியைத் தாயார் வேண்டிக்கொள்ளும் பருவம். இது நான்காம் ஆண்டில் நிகழப்பெறுவதாம்.

## ஆராய்ச்சி

இந்நூலாசிரியர் வாக்கில் தமிழ் நயமும், பத்திச் சுவையும் மலிந்துள்ளன. இவர் முருகவேள் திருவிளையாடல்களைக்கூறும் பகுதிகளும், சிவபெருமானுடைய செயல்களும், உமாதேவியார் திருமால் முதலியோரைப்பற்றிய செய்கைகளும் படிப்போருக்கு அருணகிரிநாதர் அருளிய திருப்புகழ்ப் பகுதிகளை நினைவில் வரச்செய்து இன்பம் செய்வனவாம். நக்கீரதேவர், அருணகிரிநாதர், பொய்யாமொழி முதலிய பெரியோர்களை இவர் பாராட்டுவர்.

**சிவபெருமான் :** கங்கையைத்தரித்தல், மேருவை வில்லாக வளைத்தல் கூறப்பட்டுள.

**உமாதேவியார் :** அசலமகள், புராதனி, நிமலை, அநுபவகமலை, வனதுர்க்கை, மாலினி, காமினி, மாயினி, மோகினி, சிவபாமை, உமை, முக்கணுயகி, கௌரி, முத்துவாளி, விமலை, உமை: "அசல குலபதி தருமொரு திருமகள் அமலை விமலைக ளெழுவரும் வழிபட அருளி அருணை யிலுறைதரு மபிராமி, அநகை அநுபவை அநுதயை அபிநவை...பழையவள் அருளிய சிறியோனே" (திருப்புகழ்).

**விநாயகர் :** விநாயகவணக்கத்திலே நக்கீரதேவர் அருளிய திருமுருகாற்றுப்படையையும், அருணகிரி நாதர் அருளிய திருப்புகழையும் பெரிதும் மதித்துத் தமதுசிறுமையையும் வெளியிடுகின்றார் இவ்வாசிரியர். மேருமலையில் விநாயகர் வியாதர் கூறிய பாரதம் இலட்சத்து இருபத்தையாயிரம் சுலோகங்களையும் எழுதியதைக் குறித்திருக்கிறார்.

**விநாயகர் நிவேதனப்பொருள்கள் :** அவல், பயறு, முப்பழம், அப்பம், மோதகம்; "கடலை பயறொடு துவரையெள் அவல்பொரிசுகியன் வடைகனல்கதலியி னமுதொடு கனியு முதுபல கனிவகை ... குடகுவயிறினில் அடைவிடு மதகரி" "கைத்தல நிறைகனி அப்பமொ டவல்பொரி கப்பிய கரிமுகன்" (திருப்புகழ்). "அப்பம், இடியவலோ டெள்ளுண்டை கன்னல் வடிசுவை" "வாழைக்கனி பலவின்கனி மாங்கனி ...கூழைச் சுருள்குழை யப்பம் எள்ளுண்டை எல்லாந் துறுத்தும்பேழைப் பெருவயிறு" (மூத்த - இரட்டை மணிமாலை).

**முருகவேள் திருநாமங்கள் :** தெய்வசிகாமணி, கடம்பன், சத்தித்தடங்கஞ்சன், பரங்குன்றன், பச்சிளங்கந்தன், செய்கைக்கந்தன், சத்திவீரன், அறுமுகன், அகிலத்துமூலன், அரிதன்மருகன், அரன்மகன், முதுதமிழ்க்கூட்டன், குவளைமலர்ச் சூட்டன், வளவனகர் வடதெருவின் முருகன், அருணகிரி புகழும் முதுதமிழ்த்தூக்கன், தெய்வமுளை, தோகைவாகனன், குகன், நீபமாலிகையன், கடம்பின் ஏட்டுப்புயன், தேவாதிபன், புவனத்தொரு முதல்வன், கருணையன், சிவநேயத்தவன், சேய், சுருதித்தாய், தமிழின் திரு, மூவாமுதல், மூவிருமுகன், மயிற்கரசு, இருமுத் திருமேனியாம் பாலகர், சரவணத்தான், கிரிகுமரியொருதலைவரவர் புத்திரர், செய்கைப்பெருமாள், செவ்வேற்பெருமாள், தெய்வப்பெருமாள், மயிற்பெருமாள், திருமகள்மருகன் முதலியன.

**முருகன் செயல்கள் :** உமாதேவியார்பால் பாலருந்தல், கங்கையில் வளர்தல், கிரவுஞ்சமலையைப் பிளத்தல், தேவர் சிறைமீட்டல், கார்த்திகைப்பெண்கள் பால்தரல், இறைவர் செவியில் ஒருமொழி (பிரணவம்) பகர்தல், ஒரு கற்பத்தில் சுவாகாதேவியினிடம் தோன்றல் முதலியன.

**முருகன் தலங்கள் :** சீரலையின் வாய்ச்செந்தூர், செங்கோடை, திருப்பரங்குன்று, பழநி, தணிகை, திருவாவினன்குடி, இடைக்கழி, விராலிமலை, கதிர்காமம், ஏரகம், குன்றுதொறாடல் என்பன.

**பிரணவ உபதேசம்செய்தது :** "பிறைச் சடையர், குருவெனநு லுரையுதவு மயிலா" "குருவா யரற்கு

முபதேசம் வைத்த குகனே 'குறத்திமணவாளா'' ''சேவேறுமீசர் சுற்ற மாஞான போத புத்தி சீராக வேயு ரைத்தகுருநாதா'' (திருப்புகழ்) என்பனகாண்க.

இறையனார்களவியலுரை கேட்டமை: ''வழுதியர் தமிழின் ஒருபொரு ளதனை, வழிபட மொழியும் முருகேசா'' ''அருமறை தமிழ்நூ லடைவே தெரிந் துரைக்கும் புலவோனே'' (திருப்புகழ்) என்பனவற் ருல் அறியலாம்.

திருமால்: கார்க்கடல் மேனியன், துழாய் மவுலி, முராரி, பஞ்சாயுதன், பாம்பணைத்துயிலும் பரஞ்சோதி முதலிய நாமங்களும்; மார்பில் இலக்குமியை வைத் திருத்தல், சங்கு சக்கரம் தரித்தல், பாற்கடலில் விழி வளர்தல், பன்றியாய் உழுதல் முதலிய செயல்களும் பிறவும் கூறியுள்ளனர்.

மாரீசன் கரன் வாலி இவர்களை வதைத்தல் இராவணன் இருபது தோள்களையும் அறுத்தல் ஆதி யனவும் குறிக்கப்பட்டுள்ளன. ''வடிவுடைய மானு மிகல்கர னுந்திகழ் எழுவகைம ராமரமுநிக ரொன்று மில்வலியதிறல் வாலி உரமுநெடுங்கடல் அவை ஏழும், மறநிருதர் சேனை முழுதுமி லங்கைமன் வகையிரவி போலு மணியும லங்க்ருத மணிமவுலி யான வொரு பதும் விஞ்சிரு பதுதோளும்; அடைவளமு மளவிடு சர அம்புடை தசரதகு மார ரகுகுல புங்கவன் அருள் புனைமு ராரி மருக'' (திருப்புகழ்).

ஆதிமூலமே என்று கூப்பிட்ட கரியைக் காத்த மால்மருக: ''குறைபட்டேயுயிர் காத்துக் கொள்வாய்

என முறையிட்டோர்கரி கூப்பிட்டநாளொரு குரலிற் போயுயிர் காத்துக் கொள்வோர்திரு மருகோனே" (திருப்புகழ்).

கங்கை: ஆயிரம் முகமுடையது என்பர். கங்கை மூவுலகத்தையும் அழிக்க முற்பட்டமை. சகரரைக் கரைசேர்த்தமை, உமாதேவியார் கர வியர்வில் தோன்றியமை, ஆடுவார் வினைகெடுத்தல், இறைவர் சடையிலிருத்தல், நதிகளுக்கரசி என்பன கூறப்பட்டன.

பிரமன்: குவலயப்பிதா, விதி, எண்கணன், வனசத்திறையவன், எகினனூர், இரணியகருப்பன் என்பன.

முனிவர்: அத்திரி, நாரதர், அகத்தியர், காசிபன் முதலியோர்.

கோள்கள்: கதிரவன், செவ்வாய், புதன், குரு, புகர், மந்தன், இராகு கேதுக்கள்.

மலைகள்: சக்கரவாளகிரி, கிரவுஞ்சகிரி, மகேந்திரம், மேரு, இமயம், திசாமுகக்கிரிகள்.

ஆறுகள்: கங்கை, சேயாறு, பாலாறு, குமரியாறு, கம்பாநதி என்பன.

நாடு: பாலித்திருநாடு, தொண்டைநாடுமுதலியன.

நகர்: வளவனகர்,

விலங்குகள்: தகர், ஞாளி, ஆடு, மாடு, உழுவை, மரை, இரலை, அரி, வழுவை, கரடி, வருடை, மந்தி, கடாசலம் (யானை), நவ்வி, மேதி, கொடுவரி, பகடு, பிடி, களிறு, கவி (குரங்கு), களபம் என இவை.

**பறவைகள்:** சேவல், மயில், சிரல், குருகு, போதா, ஓதிமம், தாரா, பூவை, குயில், கிளி என்பன.

**நீர்வாழ்வன :** மகரம், கரா, திமிங்கிலம், திமிங்கில கிலம், சுறு, வாளை, கயல், வரால், சங்கு, முத்துச்சிப்பி, நீர்நாய், சலஞ்சலம், வலம்புரி.

**தாவரங்கள் :** குருந்து, திலகம், கடம்பு, அரசு, கமுகு, வருக்கை, தாழை (தென்னை), மா, வாழை, கரும்பு, தமாலம், வேய், அகில், சந்தனம் (ஆரம்), கற்பகம், வேல், கவிர், இதழி, ஆர், குந்தம், துளவம், சூதம், செந்நெல், காரகில், கிடை (நெட்டி).

**அணிகலங்கள் :** மேகலை, கழல், சிலம்பு, கேயூரம், நூபுரம், மவுலி, கங்கணம், தோடு, பரிபுரம், சதங்கை, தொடி, அரைவடம், மதாணி, கிங்கிணி, மௌலி, கடகம்.

**இராசிகள்** மேடராசி (ஆட்டுக்கொருகால்), இடபராசி (மாட்டுக்கொருமுக்கால்).

**சிறுபொழுது:** காலை, கடும்பகல், மாலை, வைகறை.

**சிவதலங்கள் :** கச்சியேகம்பம், அருணைசலம், காளத்தி, மயிலாப்பூர், ஒற்றியூர், திருவாலங்காடு (வடாடவி), கழுக்குன்றம் (வேதபுரி).

**சில தெய்வப்பெயர்கள்:** சித்திவிநாயகர், மாவடிக் கந்தர், கரியகஞ்சுகக்கடவுள் (வயிரவர்), வீரபத்திரர், இந்திரன், இயமன் (மறலி), தரணி (சூரியன்), அலகை என்பன.

**அரசர் :** தொண்டைமான், செம்பியவளவன், வளவன்கழுக்குன்றன் முதலியோர்.

**தொழில்கள் :** உழுது பயிர்செய்தல், உப்பு விளைத்தல், பரவர் தூண்டிலிடுதல், தேனெடுத்தல் முதலியன.

**அசுரர்கள் :** சூரபன்மன், சிங்கமுகன், தாருகன், பாநுகோபன்.

**உலகம் :** பாதளம், பூமி, பொன்னுலகம் (கனகப் பதி). அளகை, அமராவதி.

**வேலாயுதம் :** "உலாவுதய பானுசத கோடியுரு வானவொளி வாகுமயில் வேலங் கையிலோனே" (திருப்புகழ்).

**மயில்வாகனம் :** "அதிரவரு சண்டவாயு என வருக ருங்கலாப அணிமயில்வி ரும்பி ஏறும் இளையோனே" (திருப்புகழ்).

**ஆறெழுத்து :** அறுவகைமை லிபியை நவில்குண நிபுணர் அருணகிரி மித்திரர்: "எழுத்தாறும் தரித்தார் இதயத் தாமரைச் செந்தேன்" (திருப்புகழ்).

**இரத்தினங்கள் :** தரளம், வைரம் (வச்சிரம்), பவளம், மரகதம், மாணிக்கம்.

**மலர்கள் :** தளவு, (நீலோற்பலம்) நீலம், குவளை, தாமரை. காந்தள், மாதுளை, குமுதம் முதலியன.

**வாத்தியம் :** உடுக்கை.

**ஆயுதங்கள் :** அம்பு, வச்சிராயுதம், சூலம், வேல்.

**கருவிகள் :** கரும்புயந்திரம், தூண்டில், பிறை யிரும்பு (அரிவாள்).

**திக்குகள் :** பச்சிமதிக்கு: "பூர்வ பச்சிம தக்ஷிண உத்தர திக்குள" (திருப்புகழ்).

**சாதிப்பெயர் :** பரவர். மள்ளர், பொதுவர். கடையர், உமணர்.

**முறைப்பெயர் :** தாய், தந்தை, மாமன், மாமி, மகள், மருகன், புதல்வி, புதல்வன், மதலை, மைத்துனன் என்பன.

**வருணனைகள் :** முத்தப்பருவத்திலே முருகக் கடவுள் சிவப்பொழுகும் திருவாயை வருணிக்கத் தொடங்கி முருக்கு, காந்தள், மாதுளை, குமுதம், தாமரை, இலவு, வீழி, கொவ்வை, அசோகு, இங்குலிகக்குழம்பு, பவளத்தொளி இவற்றையெல்லாம் வரிசைப்படுத்து ஒன்ருய்ச் சிவக்கும்படி செய்யும் திருவாய் என்கின்ருர் இவர்.

இரவுபகல் தெரியாப் பெருவளன், வானரங்களின் செயல், அன்னப்பறவை பொழில் புகுதல், தூண்டிலுக்கு அஞ்சிய சுருமீன் சுழலல் இவை வருணிக்கப் பட்டுள. முருகக்கடவுள் வாகனம் கட்டுமிடம் முதலியன, அவர் கோபத்தால் விளைவன, தணிகைவரையில் குகன் குவளை மலர்மாலை அணிதல் கூறப்பட்டன. சந்திரனுடைய அமுதகலையைத் தேவர் நுகர்தல், முருகாற்றுப்படை வரலாறு, சாம பேத தான தண்டங்களைக்கூறல் இவைகளும் வந்தமை காண்க.

வடசொற்களும், சொற்றொடர்களும்: மகிதலம் குவலயம், மரகததுரகம், மணிகணகிரணம், உரகம், ககனபதி, பகிரதி, மகபதி, நயனபதுமம், தைத்தியர், உததி, சதகோடி, மகோததி, கிராதர், அடவி, அசலம் திரிபுவனம், அகிலம், இமகிரி, சடிலகுலமவுலி, விபுதர், பூதேசன், கற்பகாடவி, சக்ரபூதரம், சசி, சடரம், நளினம், சததளம், படாடவி, பமரம் (பிரமரம்), ரதவித துரகசலதி, சக்திதர, உரககுலேசன், வக்த்ரம், சத்ரம், துவசம், கனகம், அரவிந்தம், இரணியகர்ப்பன், தரணி, அரணியம், நயனம், வனசம், முண்டகம், ஆதவன், இமகரன், பம்மகத்தி (பிரமகத்தி), பவை (பிரபை), கிரிவனிதை, கீரம், தவளம், மித்திரன், அனிகம், அதி கதியினிரதவிதம், லிபி, குணநிபுணர், கரடமதவுததி விகடமத மத்தம், திரிபதகை சுதன் முதலியன.

சிலசொற்கள்: கரித்தேவி, ஆறுமீனப்பூவையர், கடைக்காலை வேலை; சிறுத்தாக்கன் என்பன.

பிறசெய்திகள்: கபிலமுனிவர்சாபத்தால் சகரர் சாம்பலானமை, உமாதேவியார் சிவபெருமானுடைய திருக்கண்களைப் பொத்துதல், திருமால் யோகநித்திரை செய்தல், வயிரவர் திருமாலின் தோலைச் சட்டையாக அணிந்தமை, மாங்கனியைப்பெற உலகத்தை ஒரு நொடியில் வலம்வந்தமை, ஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கியது, கண்ணன் உறியில் வெண்ணெய் திருடி அடிபட்டமை, சிவபிரான் பாண்டியன் பிரம் பால் அடிபட்டமை, சேயூர் கடலை அடுத்திருத்தல், உப்பளம், எழுத்தெல்லாம் அகரத்தை முதலாக வுடையது போல அகிலத்துக்கு மூலன் முருகன் முதலியன.

குதலே, மழலே முதலிய சொற்களும், நனே போது என்பனவும் வந்தன. கோழிக்கொடி, மயில்வாகனம், வேலாயுதம், சரவணப்பொய்கை, ஆறெழுத்து, திருப் புகழ் இவற்றை அடிக்கடி நினேவூட்டுகிருர்.

முருகாற்றுப்படை, அருணகிரிநாதர் திருப்புகழ்ச் சந்தம், வளவன் கழுக்குன்றன் புண்ணியச் செயல், கந்தபுராணக்கதை, சேறைக் கவிராசபிள்ளே உலா முதலியவைகளே அம்புலிப்பருவம் 10-ம் பாடலிலே கூறிப் பாராட்டுகின்ருர்.

இப்புலவர்பிரான் திருவாரூர் உலா, திருக்கழுக் குன்றத்து உலா, சேயூர்க்கலம்பகம் முதலிய பிரபந் தங்களே இயற்றுதற்கு முன்னமே இப்பிள்ளேத்தமிழை இயற்றினர் என நினேத்தற்கு இடமுண்டாகிறது. எனி னும், திருக்கழுக்குன்றப்புராணத்தைத் தமிழ்ச் செய்யு ளால் இயற்றியபின்பே இதனே இயற்றினராதல் வேண் டும். கம்பராமாயணம், கந்தபுராணம், ஏனேயதலவர லாறுகள் இவற்றையெல்லாம் புலமை மிகக் கற்றுத் திருப்புகழில் மிக மிக ஈடுபட்டிருந்து, தமிழ்த்தெய்வ மாகிய முருகக்கடவுளே முதல்முதலாகபிள்ளேத்தமிழ்ப் பிரபந்தத்தால் துதிப்பாராயினர். கவித்துவசத்தி மெல்ல மெல்லவே உருப்பெற்று வளர்ந்தோங்கியதுபோலும். இப்பிள்ளேத்தமிழில், உலாக்களில் பொதுளிய சைவ நலங்கள் இல்லாவிடினும் வருணனேப்பகுதிகள் சிறந்து விளங்குகின்றன. "தன்னுடையாற்றல் உணரா ரிடை யினும், தன்னேப் புகழ்தலும் தகும்புல வோற்கே" என்றபடி இவர் சீட்டுக்கவிகளில் தன்னேப் பெரிதும் பாராட்டியிருக்கிருர். திருமுருகாற்றுப்படை முதல்

கந்தபுராணம் வரையிலுள்ள நூல்களின் பெருமை யோடு, கவிராசராசன் செய்த உலாவைக் கற்றுருக லாம் எனச் சொல்லித் தான்செய்த பிள்ளைக்கவி கலம் பகம் இரண்டனையும் உடன்வைத்துப் போற்றுகின் ருர். தம்முடைய வாக்கில் தம்முடைய பெயரையும், ஆற்றலையும், செய்யுள் நயத்தையும் எடுத்துக்காட்டும் ஒருவகை வழக்கம் அக்காலத்து இருந்ததுபோலும். சேறைக் கவிராசரும் சேயூர் முருகனுலாவில் இவ் வாறே கூறினமை காண்க.

இனி, இப்பிள்ளைத்தமிழின் அச்சிட்ட பிரதி யொன்று நெடுங்காலமாக என்னுல் பாதுகாத்துவைக் கப்பட்டிருந்தது. இதனை 1902-ல் அச்சிட்டுதவியவர் ஸ்ரீ க. குப்புசாமிமுதலியார் அவர்கள் B. A., என்பவர். இக்காலத்து நூல் தேடிப்படிப்பாரரியராயினர். சுமார் 56 ஆண்டுகளின்முன் அச்சிட்டமையின் இந்நூல் கிடைத்தல் அரிதாயிற்று. கிடைத்த பிரதியும் மடங்கி ஒடிந்துவிடும் நிலையில் உள்ளது.

மெய்கண்டசாத்திர நூல்கள் பதினுன்கையும் இவ்வாதீனத்து உரையுடன் நன்கு ஆராய்ந்து வெளி யிடுவித்தமையோடு அமையாமல், மக்கள் உணர்ந்து சாத்திரங்களிலே ஈடுபட்டுய்யத் திருவுளங்கொண்டு உரைநடை விளக்கங்களையும் உடனெழுதுவித்து அச் சிட்டு இலவசமாக வழங்கித் தமிழுலகம் புகழ்ப்படாத் தைப் போர்த்து மகிழச்செய்யும் ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமஹா சந்நிதானம் திருமந்திர மாநாட்டையும், சித்தாந்த சைவ மாநாட்டையும் ஆண்டுகள்தோறும் கூட்டிக் கூட்டிச் சாத்திரங்களையும் தோத்திரங்களையும் விரி வுரை வாயிலாகவும் சைவசமயக் கருத்துக்களைச்

செவ்விய சைவசித்தாந்த நெறிபிறழாமல் வழங்கிவரு கின்றமை உலகம் அறிந்த செய்தியேயாம். திருமந்திரச் சரக்கறையைத் திறந்துவிட்டு யாவரும் துய்க்கும்படி செய்ததொன்றே ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமஹாசந்நிதானத்தின் கருணைத்திறத்துக்குப் போதியதாம். செந்தமிழ்ச் சிறு நூல்களும் பெருநூல்களும் குறிப்புரை முதலியவற் றுடன் வெளிவந்தவண்ணம் தொண்டாற்றப் பணித் தருளியிருப்பதும் பாராட்டுதற்குரியதே.

இப்போது ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமஹாசந்நிதானம் தமது ஜென்மநட்சத்திரப் பெருவிழாவிலே எடுத்தணிவயலில் ஸ்ரீ பஞ்சாக்கரவிநாயகருக்கு விசேட அபிடேக ஆரா தனை இயற்றி மக்களை வழிபாடாற்றச்செய்து ஆன்ம லாபத்தையும், அருத்தியுடன் உணவருத்தி அவிச் சுவையையும் மக்கள் துய்க்கச் செய்தார்கள்: அன்றி யும், கவிச்சுவையையும் அறிந்து கடைத்தேறக் கபில தேவநாயனார் அருளிச்செய்த மூத்தநாயனார் திரு இரட்டை மணிமாலையை விரிந்த உரையுடன் வெளி யிட்டு வழங்கி அருளினார்கள்.

அதனை அடுத்து (28-3-58) பங்குனித் திருவாதிரை நாளில் 20-வது குருமஹாசந்நிதானத்தின் 7-வது குரு பூசைவிழாமலராகச் சேயூர்முருகன் பிள்ளைத்தமிழைக் குறிப்புரையுடன் அச்சிட்டு வழங்கக் கட்டளையிட் டருளியது. அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு என் னுடைய அறிவு சென்ற அளவில் ஒருகுறிப்புரையும் ஆராய்ச்சி முகவுரையும் எழுதித் திருமுன் சேர்ப்பித் தேன். தலவரலாறும் எழுதிச் சேர்க்க எனக் கட்டளை பிறந்தது. தலவரலாற்றை அறிந்துகொள்ள இயலாமல் மயங்கினேன். உடனே தணிகைமணியின் ஞாபகம்

வந்தது. வரலாறு எழுதி அனுப்பவேண்டும் எனக் கேட்டுக்கொண்ட மறுநாளே தணிகைமணியவர்கள் ஆதீனத்தின்மீது தாங்கொண்ட பத்திமிகுதியை வெளியிட்டுக் காட்டுவார்போன்று எழுதியனுப்பி உபகரித்தார்கள். இத்தலவரலாற்றை அவர்கள் பெயராலேயே இதன்கண் அச்சிட்டு வைக்கப்பட்டுள்ளது. அவர்கட்கு நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன்.

சேயூர் முருகன் பிள்ளைத்தமிழாகிய இந்நூல் சேயூர்ச் சுப்பிரமணியர் பிள்ளைத்தமிழ், சேயூர்க்கந்தர் பிள்ளைத்தமிழ் என்றும் பெயர்பெறும். மூன்றுபெயர்களிருப்பினும் முதற்பெயராலேயே ஆசிரியர் இந்நூல் வழங்கியிருப்பர் என முன்பு அச்சிட்ட முதலியாரவர்கள் முகவுரையில் கூறியிருத்தலின் அவர்கள் அச்சிட்டபடியே இதனை வழங்கலாயிற்று. சில இடங்களில் திருத்தமான பாடம் கொடுக்கப்பட்டுளது. குறிப்புரையும் ஆராய்ச்சியுரை முதலியனவும் இயன்ற அளவு இந்நூலைக் கற்போருக்குத் துணைசெய்யும் என்பதில் ஐயமில்லை. இதனை அறிஞர்கள் பொறுத்து அங்கீகரிப்பார்கள் என்று நம்புகின்றேன். இன்னும் திருந்துதற்குரிய பாடங்களும் உண்டு.

ஸ்ரீ-ல-ஸ்ரீ குருமஹாசந்நிதானம் நீடூழி வாழ்க என வாழ்த்தி வணங்குவதையன்றி வேறென்ன செய்யக் கடவேன்.

*இங்ஙனம்,*

*சித்தாந்தசைவமணி—*

**த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளை,**

*ஆதீனவித்துவான்.*

**திருவாவடுதுறை**
**27—3—1958.**

## நூலாசிரியர் வரலாறு

---

சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் என்னும் நூலைச் செய்த ஆசிரியர் அந்தகக்கவி வீரராகவ முதலியார் என்பவர். தொண்டைமண்டலத்திலே திருக்கழுக் குன்றத்துக்கு அணித்தாகவுள்ள உழலூர் என்னும் ஊரில் வடுகநாதமுதலியாருடைய புதல்வராக இவர் தோன்றினர். பரம்பரைச் சைவவேளாண் குலத்தினர். இவர் பிறவியிலேயே கண் இழந்தவர் என்பர். இவருக்குப் புறக்கண் இல்லாதிருப்பினும் இளமை முதலாகத் தமிழ்க்கல்வியில் அளவில்லாத ஆர்வமிருந்தது. அதனால் இவருடைய தந்தையார் நல்லாசிரியர் பலரைக்கொண்டு கல்வி கற்பிக்கச்செய்தார். பின்பு, கந்தபுராணம் இயற்றியருளிய கச்சியப்பசிவாசாரியர் பரம்பரையில் வந்த கச்சியப்பக்குருக்கள் என்பவர் தமிழ் நூலறிவு மிகுதியாகவுடையவர் என்பதை அறிந்து அவர்பால் வீரராகவரை ஒப்படைத்துத் தமிழ் இலக்கண இலக்கிய அறிவு நிரம்பச்செய்தார். முன்னைத் தவவிசேடத்தால் வீரராகவர் அகக்கண்ணால் கவியுலகத்துக் காட்சிகளை உணர்ந்து உணர்ந்து இன்புற்று வந்தார். 'கண்ணுடையர் என்பவர் கற்றோர்' என்று திருவள்ளுவர் அருளிய குறளுக்கு இலக்கியமாக வாழ்ந்தவர் இவர் எனக் கூறலாம்.

தமிழ்நூல்களைப் பயின்றுவரும் காலத்திலேயே இவர் அறிவிலே மறைந்திருந்த கவித்துவசத்தி சிறிது சிறிதாக அரும்பி மலர்வதாயிற்று. இவருடைய தெளிந்த அறிவிலே சிவபத்தியும் சேர்ந்து தமிழ்ப்

புலமை முதிர்ச்சி அடைந்தது. சைவநூல்களில் இவர் மனம் ஈடுபட்டது. திருத்தொண்டர் புராணத்தில் இவர் மிகவும் அழுந்தினார். பல தலவரலாறுகளையும் அறிந்தார். சிவபெருமானுடைய திருவருட்டிறங் களையும், அவர் திருவிளையாடல்களையும் அறிந்தறிந்து மனமிக உருகினார். அதனால் அவ்வப்போது அக்கருத் துக் குவியல்கள் செய்யுள்வடிவில் வெளிப்பட்டன. கம்பராமாயணத்தையும் நன்குகற்றார். கல்வியிற்பெரிய ராகிய கம்பரது செய்யுட்சுவைகளையும் துய்த்தார். கேட்போர் விரும்பும்வண்ணம் நூல்களிலுள்ள செய் யுட்களைக்கூறிப் பொருளை விரித்துரைக்கும் ஆற்றலும் அவருக்கு மிக்கது. இதற்கிடையே சங்கீதவித்துவான் ஒருவரிடம் வீணைப்பயிற்சியும் பெற்றார். வீரராகவன் கவி வீரராகவன் எனச் சிறப்படைந்தார். கவித்துவ சத்தியை உலகமறிந்து அவரை மிகவும் கௌரவித்தது. தமிழ்நாடெங்கும் அவர்புகழும் பரவத்தலைப்பட்டது.

இவ்வாறாக, ஒருநாள் அவர் மனைவி அவரை அவ மதித்துப் பேசினாள். அதனைப்பொறாத வீரராகவர் ஊரைவிட்டுப் புறப்பட்டார். பல ஊர்களுக்குச் சென் றார். அங்கங்கே உள்ள பிரபுக்களும், புலவர்களும் அவரை உபசரித்தனர். இலங்கைக்கும் சென்றார். அங்கே அப்பொழுது ஆட்சிசெய்துவந்த பரராச சேகரனைக்கண்டார். தமது கவித்திறமை கல்வித்திற மைகளைக் காட்டினார். பலபரிசுகள்பெற்றார். பரராச சேகரன் தமிழ்ப்புலமை வாய்ந்தவனாதலின் இக்கவி ஞரிடம் பெருமதிப்பும் பேரன்பும் கொண்டான். இவரைச் சிறப்பித்துப் பலபாடல்கள் இயற்றி மகிழ் வித்தான். இவரும் அவ்வரசனைப் பல பாடல்கூறி

இன்புறுத்தினர். அவன்மீது ஒருவண்ணமும் இயற்றினர் என்பர். அரசனிடம் விடைபெற்றுத் தம் ஊரை அடைந்தார். பூதூர், பொன்விளைந்த களத்தூர், உழலூர் என்னும் மூன்று ஊர்களிலும் இருந்தே இவர் கலங்கழித்தார்.

திருக்கழுக்குன்றப் புராணத்தைத் தமிழில் செய்யுள் வடிவாக இயற்றியுள்ளார். இவர்இயற்றிய வேறு நூல்கள் திருக்கழுக்குன்றத்து உலா, திருவாரூர் உலா, கீழ்வேளூர் உலா, சந்திரவாணன்கோவை முதலியன. இப்பிள்ளைத்தமிழ் நூலையன்றிச் சேயூர்த் தலசம்பந்தமான ஒருகலம்பகமும் இயற்றினர் என்பர். இவர் அவ்வப்போது இயற்றிய சீட்டுக் கவிகளும், வசைக் கவிகளும் பல உள. விரிவானவரலாற்றைத் தமிழ்ப்புலவர்கள் வரலாறு (17 - ஆம் நூற்றாண்டு) முதலியவைகளில் காண்க. 18 - ஆம் நூற்றாண்டினர் என்பர் ஸ்ரீமத் ஐயரவர்கள் : ஆராய்க,

---

# தலவரலாறு*

ராவ்பகதூர் தணிகைமணி—

*திரு. வ. சு. செங்கல்வராயபிள்ளை அவர்கள், M. A.*

*"சென்னையிலிருந்து தென்னிந்திய இருப்புப் பாதையில் 50 ஆவது மைல் மதுராந்தகம். மதுராந்தகத்திற்குக் கிழக்கே 16 மைலில் சேயூர் (செய்யூர்) உள்ளது. பஸ் போகின்றது. முருகக் கடவுளுக்குத் தனி ஆலயம். பிரபல ஸ்தலம். திருப்புகழ்ப் பாடல் பெற்றது. ஜனத்தொகை 6200. (1944-ம் ஆண்டுக் குறிப்பு). அதில் சுமார் 3000 பேர் ஆதிதிராவிடர்கள். கிராமப் பஞ்சாயத்து, கூட்டுறவுச் சங்கங்கள் உண்டு. லோகல்பண்டு டிஸ்பென்ஸரி, சால்ட் ஆபீஸ், சப்ரிஜிஸ்ட்ரார் ஆபீஸ், போலீஸ் ஸ்டேஷன், போஸ்ட் ஆபீஸ் உள்ளன. வியாழக்கிழமையில் சந்தை கூடுகிறது. சந்தையில் சுமார் ரூ. 8000-க்கு வியாபாரம்.*

**ஆலயம்:** *முருகன்கோவில் ஊருக்கு நடுமத்தியில். மதில் சுமார் தெற்கு வடக்கு 59 கஜம். கிழக்கு மேற்கு 57 கஜம். மதிலைச் சார்ந்து ஒரு நந்தவனம். அதற்கு எதிரில் ஒரு பிள்ளையார்கோயில். முகத்துவாரத்தில் கோபுரம் இல்லை. மூலஸ்தானத்துக்கு*

---

*செய்யூர் முத்தையமுதலியார் B. A., இயற்றிய சேயூர்த் தலவரலாற்றினின்றும் எடுத்தெழுதப்பட்டது எனத் தணிகைமணி குறித்துள்ளார்கள்.

மேலும், அம்மன் கோயிலுக்குமேலும் அழகிய சிறு கோபுரங்கள் இரண்டு உள்ளன. பிராகாரங்கள் இரண்டு. உட்பிராகாரத்தின் தென்மேற்கு மூலையில் சம்ஹாரமூர்த்தி என்கிற முத்துக்குமாரசாமி; வடக்கே சண்டேசுரர், விநாயகர், கைலாசநாதர், சிவாநந்த வல்லி, பிரமா, விஷ்ணு, வீரவாகுதேவர், ஸ்ரீபலி நாயகர், அஸ்திரதேவர், தண்டபாணி முதலிய விக்கிர கங்கள் இருக்கின்றன.

மூலஸ்தானம் கிழக்குநோக்குகின்றது. பெருமான் தேவசேனை வள்ளியம்மைசமேதராய்க் கம்பீரத்துடன் விளங்குகிறார். சுமார் 2½ அடி உயரம. மூலஸ்தானத் துக்குத் தெற்கே உற்சவமண்டபம். அதில் ஒரு அறையில் சோமநாதஸ்வாமி மீனாட்சியம்மை, மூல ஸ்தானத்துக்கு எதிரில் தீபாராதனை மண்டபம். அதற்கு வடகிழக்கில் அம்மன்கோயில் பிரத்தியேக மாக இருக்கிறது. இதில் தேவசேனை வள்ளி விக்கிர கங்கள் இருக்கின்றன. சிவப்பிரகாசசுவாமிகள்

'... ... நல்லவளம் —
மிக்கெலா நாளும் விழாவரு வீதியணி
திக்கெலாம் ஏத்தமலி சேயூரம்'

எனச் சிவஞானபாலையதேசிகர் நெஞ்சுவிடு தூதில் சிறப்பித்திருக்கிறார். சுமார் 300 வருஷங்களுக்குமுன் உப்புவளம்பொலிய இருந்தபடியை,

'உப்பள மெங்கும் நிரப்பு சேயூர்'
'உமணர் அமைத்த உப்பினமும்'

எனப் பிள்ளைத்தமிழ் பாராட்டுகிறது. இப்பொழுது கவர்ன்மெண்டாருக்கு இவ்வூர் உப்பால் வருமானம் சுமார் இரண்டு லக்ஷத்துக்கு அதிகமாகும். கழுக் குன்றன் (ஒற்றிகொண்டான் என்னும் சைவப்பெரி யார் ஒருவர்) திருப்பணிசெய்து திருவிழா நடத்தி முருகன் அருள்பெற்றார். தேர்விழாநடத்தின ஆண்டு 1521-22 கி. பி. (சிறுதேர்ப்பருவம் 6-வது பாடல் பார்க்க.)

தலசம்பந்தமான நூல்கள் :

1. சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் 2. சேயூர்க் கலம்பகம் இந்த இரண்டும் அந்தகக்கவி வீரராகவ முதலியார் இயற்றியன. (பிள்ளைத்தமிழ் அம்புலிப் பருவம் 10-ம் பாடல் பார்க்க). 3. சேயூர் முருகன் உலா சேறைக் கவிராஜபிள்ளை பாடியது. 4. சேயூர் முருகன் பதிகக்கோவை ஸ்ரீ முருகதாசசுவாமிகள் பாடியது. அருணகிரிநாதர்பாடிய "முகிலாமெனும்" என்று தொடங்கும் திருப்புகழ் ஒன்று உளது.

**தீர்த்தம்:** கோயிலுக்கு மேற்கே ஒருபர்லாங்கு தூரத்தில் செட்டிக்குளம் என்ற ஒருதடாகம் உள்ளது. இதுவே பானத்துக்கு உபயோகப்படுகிறது. விசேஷ காலங்களில் சுவாமி அபிஷேகத்துக்குத் திருமஞ் சனம் இந்தத் தீர்த்தத்திலிருந்துதான். தைப்பூசத் தெப்ப உற்சவம் இதில்தான் நடைபெறுகின்றது. வேடர்பறி உற்சவத்தில் முருகப்பிரான் தினைமா உண்டு தாகம் தீர்த்துக்கொண்ட ஐதிகம் கொண் டாடுவதும் இப்பொய்கையில்தான். செட்டி என்பது முருகனுக்கு ஒருபெயர். செட்டிக்குளம் - முருகன்

குளம். சுவாமி தீர்த்தவாரி இந்தத் திருக்குளத்திலே தான்.

**திருவிழா:** ஐப்பசி ஆறுநாள் சஷ்டி உற்சவமும், பங்குனி பன்னிரண்டுநாள் பிரமோற்சவமும் விமரிசையாக நடைபெறுகின்றன. 12 ஆம் நாள் வேடர்பறி உற்சவத்தில் கோயில் கணிகையர் வேஷம்பூண்டு வள்ளிநாயகியின் திருமணத்தைப் பழைய முறையில் நாடகம்போல் நடித்துச் சிறப்பிப்பார்கள். இந்த நாடகம் மைதானத்தில் நிலவில் நடைபெறும். கூட்டம் ஏராளம். தை, ஆடி, கார்த்திகை மாதங்கள் கிருத்திகையிலும் மார்கழி ஆருத்திராவிலும் உற்சவம் உண்டு. தேவஸ்தானத்தில் அழகியதேர் ஒன்று உண்டு. வாகனங்களும் உள.

**சொத்து:** மானியங்கள், உப்பளங்கள், இலுப்பைத் தோப்புகள் உண்டு. செங்குந்தமரபினர் இந்தக் கோயிலுக்குப் பேராதரவு.

**பிறகோயில்கள்:** சிவன்கோயில் ஊருக்கு வடகோடியிலுள்ளது. சுவாமி வன்மீகநாதர். தேவி முத்தாம்பிகை (முத்துவாளியம்மை). சுயம்புலிங்கம் புற்றிடங்கொண்டார். இந்திரன் பூசித்த மூர்த்தி. பிரமோற்சவம் தைமாதத்தில் நடைபெறுகிறது.

பெருமாள்கோயில்: முருகன்கோயிலுக்கு நேர் மேற்கில் உள்ளது. சுவாமி கரியமாணிக்கப்பெருமாள். தாயார் - பெருந்தேவி. இக்கோயிலுக்குக் கிழக்கில் ஆஞ்சநேயர்கோயில்.

விநாயகர்கோயில் : பெருமாள் கோயிலுக்குத் தென்புறத்தில் உளது. பெயர் வரசித்திவிநாயகர்.

கைலாசநாதர்கோயில்: மிகவும் பழையகோயில். கோயிலும் கோபுரமும் இடிந்துகிடக்கின்றன. கல்வெட்டுக்களும் உள.

கிராமதேவதைகள்: திரௌபதி, பிடாரி, கெங்கை அம்மன், திப்பாய்ந்த அம்மன் முதலியன.

நவசந்திகள்: சந்திகள் ஒன்பதுக்கும் பிள்ளையார் கோயில்கள் உள.

**ஊர்:** அழகாகவும், வியப்பாயும், சதுரமாயும் விளங்குகிறது. தேரோடும்வீதி அகலமாக உளது.

**சாசனம்:** சாசனங்களின் காலம் பன்னிரண்டாம் நூற்றுண்டு. செய்யூர் என்பது ஜயங்கொண்ட சோழ மண்டலத்திலே செய்யூர்க்கோட்டத்தில் பிறையூர் நாட்டைச்சேர்ந்தது. வீரராஜேந்திரநல்லூர் என்றும் ஜயங்கொண்டசோழநல்லூர் என்றும் பெயர் பெற்று இருந்தது செய்யூர்.

**தானங்கள்:** 1. சந்திவிளக்கு வைப்பதற்காக ஆடு, பழங்காசு, புதுக்காசு, நிலம்தானம். 2. நந்தா விளக்குக்காகப் பசுதானம். 3. நைவேத்தியத்துக்காக நிலம் தானம். 4. ஆபரணங்களுக்காகக் காசுதானம். 5. திருவிழாவில் பதிகங்கள் படிக்க-பள்ளி எழுந்தருள உப்பளங்கள்தானம்.

---

# செய்யுள் முதற்குறிப்பகராதி

எண் - பக்கஎண்


| | | | |
|---|---|---|---|
| அக்காடவோ | 11 | கானேகமமுழும் | 50 |
| ஆணிக்கனகத் | 33 | கிளைபடுமுடு | 13 |
| ஆலைக்கேகரும் | 5 | குரைகழலடி | 36 |
| இந்தூர்வரைக் | 8 | குவைதருதுகி | 12 |
| இமரவிக்கிரண | 18 | கூடன்மேலைப் | 42 |
| இரணியகருப்பன் | 38 | கைத்தடிகொண் | 16 |
| இலைக்கோடுசத | 9 | கொற்றத்துழவர் | 27 |
| ஈரமனத்தவர் | 17 | கோவேகொவ் | 50 |
| உதயாதவற்கு | 51 | சுற்றில்முழங் | 53 |
| உருமேகடுக்குந் | 52 | சென்றுகராவி | 46 |
| உரைவிரிதிருப்பு | 49 | சோலைவனக்கர | 17 |
| உலகமார்பலகோடி | 2 | தவிராதவெவ் | 43 |
| உவந்துதமியேன் | 54 | துப்பளவுங்கட | 56 |
| ஊழியிற்கடவுளா | 40 | துய்யசெங்கோடை | 60 |
| எஞ்சாமுகிற்கு | 29 | தேயவும்பெருக | 41 |
| எழுத்தாய்நிகரு | 55 | நகைத்தண்டரள | 53 |
| ஒப்பாருமற்ற | 22 | நத்துக்கொத்து | 26 |
| கரிபுரம்வெளிறு | 37 | நவக்குஞ்சரமே | 28 |
| கரைதொறும் | 12 | நறியபலவிற்பெரிய | 48 |
| கறையடிக்கய | 10 | நாட்டுப்பிறையூர் | 7 |
| களையிற்கயமுங் | 45 | நிறையோடரி | 34 |
| கன்னற்குலமுங் | 35 | நிலைதுறந்தவஞ் | 6 |
| காம்பான்மலரப் | 29 | நீளவட்டப் | 21 |
| காலைத்துயிலை | 15 | நீறெழக்கனகக் | 58 |
| காழியர்நகரிற் | 45 | நெஞ்சாலுகங் | 41 |

பங்கக்கமலத் 47
பச்சிமதிக்குண 57
பதறியகலப 36
பம்பிற்கழியே 32
பரம்பிற்குமுறுங் 35
பரியாற்கரடக் 33
பாயாறெனுமத் 15
பாரங்கமீரேழை 20
பாவாய்க்குதலைக் 27
புகைவிடுசுடர் 48
புவிக்கேயிடந்தந்த 11
பூதலப்பகிரண்ட 39
பூநாறுவரிற் 44
பூநாறுபொற்பிற் 2
பூமாவின்மனை 30
பூவாதியுல 31
பெருவாய் 9
பேழைத்திரட் 21
பேருயகிரன் 1
பையிற்சுடிகை 44
பௌவத்திறங் 23
மகரமெறிகடல் 3
மகரப்பரவை 14
மகரசலதிப்படி 24
மடையைமுட்டு 18
மதகோடியாயிரங் 23
மதனுனைமைத் 39
மருங்கடுத்தவர் 5
மருத்தோய்சுருப் 59
மருவருசுருப் 4
மருவாய்வனசத் 30
மருவிற்பசுமை 51
மாவைத்தனிக் 57
மிக்கேருழும்பொற் 32
முகடுகிழிவித் 24
முதலைகவரக் 47
முதியதிரிபுவன 3
முறங்காதுகடு 7
மையோதவாரி 42
வங்கக்கடற்சூழ 20
வருணனுக்குலக 17
வளைபடுகடற்புவியி 25
வாடையடிட்பொடு 56
வாயேமலர்க்குமுத 61
வாளுஞ்சங்கு 14
வித்தேவித்தும் 26
வீடாமரப்பெரிய 60
வீதிப்படுஞ்சக்ர 38
வெய்யோன்பகலை 54
வேயாயிரங்கோடி 8
வைவத்துரந்தாடு 59

செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

உ
சிவமயம்

# முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்

---

"உலகு குளிர வெமது மதியில்
ஒழுகு மமுத கிரணமே
உருகு மடிய ரிதயம் நெகிழ
உணர்வி லெழுந லுதயமே
கலையு நிறையு மறிவு முதிர
முதிரு மதுர நறவமே
கழுவு துகளர் முழுக நெடிய
கருணை பெருகு சலதியே
அலகில் புவனம் முடியும் வெளியில்
அளியு மொளியி னிலயமே
அறிவு ளறிவை யறியு மவரும்
அறிய வரிய பிரமமே
மலையின் மகள்கண் மணியை யனைய
மதலை வருக வருகவே
வளமை தழுவு பருதி புரியின்
மருவு குமரன் வருகவே."

—ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள்.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்

---

### விநாயகர்வணக்கம்

பேருய கீரன்முற் பகருமுரு காறெனப்
பெருகாறு கண்டுமுலகிற்
பேரருண கிரிதிருப் புகழ்கண்டு நாணுது
பெறுமவத் துறுமாசையால்
ஏருய வாகனக் கடவுடன் மைந்தனுக்
கெமதுசெய் கைக்கந்தனுக்
கிளமைவள மைப்பிள்ளை யங்கவிதை நூலெழுத
வென்கரத் தாமரைதொழும்
ஆருயி ரத்துமுக முடையது சடைக்கா
டமைத்தநா யகன்வருவிலாம்
அந்தமா மேருவிற் பந்தவே தங்குறித்
தறிவியா தன்கூறுநாள்
நூருயிரத்தின்மே லிருபதை யாயிரங்
கவிதைநூ லகலமுழுதும்
நுதிமருப் பாலெழுது மொருவா ரணத்தினிரு
நூபுரத் தாமரையுமே.

# நூல்

## முதலாவது

## காப்புப்பருவம்

### திருமால்

உலகமார் பலகோடி யுயிருமுயிர்த் துடையாள்
உபயமுலைத் தலையமுதி னுழுக்கருந்துங் குருந்தைத்
திலகமார் மகுடமிசைக் கடம்பலரு மரசைச்
செய்கைவளம் பதிதெய்வ சிகாமணியைப் புரக்க
இலகுமார் பகலமெலாங் கமலையிடைக் கொடுத்தும்
எழுந்துவிழும் பரிதிமதி யிருகைவிடா தெடுத்தும்
பலகமார் படிசுமந்த பாப்பமளிப் படுத்தும்
பாற்கடன்மேல் விழிவளருங் கார்க்கடன்மே
[னியனே. 1

### வன்மீகநாதர்

### வேறு

பூநாறு பொற்பிற் கடம்பன் றனைப்புங் கவர்க்காகவே
போராடு சத்தித் தடங்கஞ் சனைப்புன் சொலைத்தீருமால்
பானூறு முத்தப் பரங்குன் றனைப்பண் டுமைத்தேவியார்
பால்வாய னைப்பச் சிளங்கந் தனைப்பண் பளித்தாளுமால்
கானூறு பக்கத்தி லெங்குங் குதிக்குங் கயற்பாவிலே
காவாயிரத்துப் பசுங்கொம்புதிர்க்குங் கனிக்கோடிபாய்
தேனூறி ரைத்துக் குரம்புங் கரைக்குந் திரைப்பாலிசூழ்
சேயூர் தனிற்புற் றிடங்கொண் டிருக்குந் திருத்
[தாதையே. 2

முத்துவாளியம்மையார்

வேறு

மகரமெறி கடல்சுவற விடுசத்தி வீரனை
வடவரையி னருவிபுரை வடவச்ர மார்பனை
மருவிலறு முகனைநறு மதுமிக்க நீபனை
மதுரையிறை யவர்பொருளை யளவிட்ட தூயனை

அகரமுத லெழுதலென வகிலத்து மூலனை
அனலிபெறு மனைவிதனை தருமைக்கு மாரனை
அருணகிரி சொரிகவிதை யமுதத்தி னேயனை
அரன்மகனை யரிதன்மரு கனைநட்பி னுள்பவள்

நிகரசல வசலமக ணிருதப் புராதனி
நிமலையநு பவகமலை வனதுர்க்கை மாலினி
நிலவலய முழுதுயிரை நிருமித்த காமினி
நியமவறு சமயநெறி நிறுவிட்ட மாயினி

சிகரகிரி விலின்வலவர் தெரிசித்த மோகினி
சிவபாமை தருமையுமை திலதத்தி லானனி
திருபரிதி மதிமுளரி யொருமுக்க ணயகி
திரையர்புரி வருகௌரி திருமுத்து வாளியே. 3

கங்காதேவி

வேறு

முதியதிரி புவன பதவி புதைதரப் போர்த்தவள்
முனிவர் முனிவினெரி சகரர் கதிபுகச் சேர்த்தவள்
முதல்வன்முதல்விகர வியர்விலொலிகெழப்பூத்தவள்
முழுகு மனைவரையு மொழுகும் வினையறத் தீர்த்தவள்

குதிகொ ளருவியிம கிரியின் மகளெனச் சீர்த்தவள்
குலவு சதமொருப திலகு முகமெடுத் தார்த்தவள்
குழகர் சடிலகுல மவுலி குடிகொளத் தாழ்த்தவள்
குமரி முதனதியி னரசி பதமெடுத் தேத்துதும்

விதியின் முடியுடைய விறல்கொ டறைசிறுத் தாக்கனே
வெளிறு முடுமகளி ரறுவர் முதுமறைத் தேக்கனே
விரியுமுவரிமிசைவெயிலின் மயின்மிசைத்தோற்றனே
விமலர் செவியிலொரு மொழியை மொழிபகர்த் தேற்

மதியை மதிதவழு மதுரை முதுதமிழ்க் கூட்டனே[றனே
வலிய தணிகைதனில் வளர்கு வளைமலர்ச் சூட்டனே
வழுவி லருணகிரி புகழு முதுதமிழ்த் தூக்கனே
வளவ நகரின்வட தெருவின் முருகனைக் காக்கவே. 4

சித்திவிநாயகர்

**வேறு**

மருவரு சுருப்பொலி கலித்ததார் நீபனை
வடபகி ரதிக்கொடி வளர்த்தவா காரனை
வரைபக வெடுத்தெறி தடக்கைவே லாளனை
மகிதல மிமைப்பினில் வளைத்துமீள் வீரனை

வெருவரு பணிக்குல மலைத்தபோர் மாவனை
விமலைதன் முலைக்குட மடுத்தபால் வாயனை
விபுதர்தொகு திச்சிறை யறுத்தபூ தேசனை
விதிபகை ஞனைத்தனி புரக்குமோர் காவலன்

இருவரை யொருத்தரென வைத்தகோ மான்மகன்
எழுகடன் மடுத்திடர் படுத்ததாண் மூடிகன்
இரணிய பொருப்பெழுதி யிட்டமா பாரதன்
இதுபவள வெற்பென வெறித்தநீண் மேனியன்

அருவரை யெடுத்தென வெடுத்தபான் மோதகன்
அவல்பயறு முப்பழமொ டப்பமா மோதகன்
அளைகைகன கப்பதி நிகர்த்தசே யூரினில்
அவரவர் நினைத்தது முடித்தமால் யானையே. 5

சரவணப்பொய்கை

**வேறு**

ஆலைக்கே கரும்பொழியப் பொழிசாறு வழிதோ
ருறநிரும் வயற்செய்கை யாறுமுகத் தரசைப்
பாலைக்கே யடைகொடுத்து மொழிந்தபொய்யா
[மொழியைப்
பழிக்குமொருதமிழ்க்குதலைப் பசுங்குருந்தைப்புரக்க
காலைக்கே மலர்க்கமலத் திடைக்கமல மாட்டிக்
கடும்பகற்கேபசித்ததெனக் கார்த்திகைப்பாலூட்டி
மாலைக்கே திரைக்கரத்தால் அம்புலியுங் காட்டி
வைகறைக்கேசுரும்போட்டி வளர்த்தசரவணமே.

வேலாயுதம்

**வேறு**

மருங்க டுத்தவர்ப ராவாய்
வணங்கு மெய்த்தவர்த யாவாய்
மகிழ்ந்த முக்கணர வாவாய்
வழங்கு முற்சுருதி வாழ்வாய்

ஒருங்கு கற்றவர்வி ஞவாய்
உகங்க ளிற்பெரிய தேவாய்
உயர்ந்த மற்றெமது சேயூர்
உறைந்த பொற்குகனை யாள்வாய்

அருங்கடல் சுவ றுதியாய்
அகன்புவிக் குதவு தாயாய்
அகழ்ந்துவெற் புருவு கூராய்
அறந்த ழைத்தபழ வேராய்
இருங்கிரிக் குமரி கூறாய்
இறைஞ்சு மப்பகைவர் பேறாய்
எழுங்க திர்ப்பரிதி போலாம்
இவன்றி ருக்கைவடி வேலே. 7

வைரவக்கடவுள்

வேறு

நிலைது றந்தவஞ் சகர கம்புகா
நிமலர் மைந்தனைக் கமலர்தோள்
நெரிப டத்தொடுத் தொருசி றைக்குள்வைப்
பவனை நீபமா லிகையனைத்
துலைது றந்தவன் டரள வாணகைத்
தோகை வள்ளிபொற் பாகனைத்
துய்ய செய்கையாள் பவனை யாள்பவன்
கையி னுகைகங் கணமொடுங்
கொலைது றந்தவித் தகர்வி ழிப்புலம்
குளிர ஞாளியந் திரளொடும்
குவல யப்பிதா வொருத லைக்கலத்
தொடுமி டித்துடிக் குரலொடும்
கலைது றந்தவத் திரும ருங்குடுத்
துடைய மேகலைக் கலையொடும்
கழல்சி லம்பொலித் திடவ ருந்தனிக்
கரிய கஞ்சுகக் கடவுளே. 8

### கார்த்திகைத்தாயர்

### வேறு

நாட்டுப் பிறையூர் வளநாட்டு
நயங்கூர் சேயூர் நறுங்கடம்பின்
ஏட்டுப் புயனைத் தினம்புரப்பார்
இவனுக் கமுதீந் தினிதிருப்பார்
ஆட்டுக் கொருகால் புகவகுப்பார்
ஆட்டுக் கருகா மருங்கணித்தா
மாட்டுக் கொருமுக் கால்கொடுப்பார்
வானத் துடுமா மடவாரே. 9

### பிரணவப்பொருள்

### வேறு

முறங்காது கடுத்தகடக் களிற்றயிரா வதத்தன்
முதற்பதவிக் குதவியென முளைத்ததெய்வ முளையை
மறங்காது வேலிலையிற் றழைத்தெழுகற் பகத்தை
வளவர்வளம் பதித்தோகை வாகனனைப் புரக்க
இறங்காத சடைமகுட மிறக்கியொரு செவிதாழ்த்
திருநாலா யிரமுகத்துக் கொருக்காலென் றிருக்கால்
உறங்காத வெண்கணனைச் சிறைவிடுக்க வுலகுக்
கொருபொருளா மவன்கேட்கு மோரெழுத்தின்
[பொருளே. 10

காப்புப்பருவம் முற்றிற்று.

திருத்தே ருருட்டியது கண்டிலார் காணவிச்
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய்சரவணப் பொய்கையாய்தோகையாய்
சிறுதே ருருட்டியருளே. 7

துய்யசெங் கோடையும் பழனியுந் தணிகையுஞ்
சுற்றிய விடைக்கழியுமுற்
சொல்லிய விராலியுஞ் சிகரமுஞ் சகரர்கைத்
தொடுகடற் சூழுமீழத்
தையதென் கதிர்காம மென்னுமலை முதலாய
தாகத் திருப்புகழெனு
அருணகிரி நாதன்பு கழ்ந்தபல மாலையும்
அறிவருள மிக்கதமிழால்
வையக மதிக்கும் பரங்குன்றமுஞ் செந்தில்
வந்தசீ ரலைவாயுநீர்
வளவயற் றிருவாவி னன்குடியு மேரகமும்
மருவுகுன் றுதொருடலும்
செய்ய பழமுதிர் சோலைமலையு நிலையாயவா
சிறுதே ருருட்டியருளே
செய்கையாய்சரவணப் பொய்கையாய்தோகையாய்
சிறுதே ருருட்டியருளே. 8

வேறு

வீடாம ரப்பெரிய கோடாட முப்பொழுதும்
வீழ்மாம் பழத்தினமுதோ
வீருலு யிர்க்குலமி ருலாமி னத்தைமன
விழைவோ டலைத்தமழையோ
ஓடாவ யப்பகடு கோடாயி ரத்தினடி
யொழியா தொழுக்குமதமோ
ஓராயி ரத்துறையி னுராத னைக்குறவர்
ஒழியா வளக்குருதியோ

நாடாவி கற்பவினை யாடாமு கத்தினிய
நறுநாக முற்றநறவோ
நாணுவி தத்தருவி தாணுமெ னப்பரவி
நதிகோடி யிற்பொருதுபாய்
சேடாச லத்தகிரி யூடாத ரிக்குமுகில்
சிறுதே ருருட்டியருளே
சேயூர தத்துபரி மாயூர சத்திதர
சிறுதே ருருட்டியருளே. 9

வாயே மலர்க்குமுத மாயே சிவப்பொழுகு
மறையே மணக்குமிறையே
வானுறு மக்கடவுண் மீனுறு முத்தமுலை
வயன்மேல் விளைத்தபயிரே
போயே கதிக்கணுகு தூயார் பிறப்பிரவு
பொரவே யுதித்தகதிரே
போகாலை யத்தமரர் மாகால்வ ளைத்ததளை
புதிதேது மித்தவரமே
சாயேமெ னப்பொருத மாயாவி தத்தவுணர்
தமதா ருயிர்க்குநமனே
தாராத ரப்புரவி வீராக ரக்குலிசா
தருவாழ வைத்தகுருவே
சேயேயெ னக்கினிய தாயேய ருத்திகொடு
சிறுதே ருருட்டியருளே
சேயூர தத்துபரி மாயூர சத்திதர
சிறுதே ருருட்டியருளே. 10

**சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.**

ஆகச்செய்யுள் 101

**சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ் முடிந்தது.**

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

எழுத்தி னவ்வுயி ரென்ன நிறைந்தளாய்
முழுத்த பேரறி வாய்முத லாகிய
வழுத்து சீர்த்தித் தணிகை மணாளனை
அழுத்து முள்ளத் தவர்க்கரு ரில்லையே.

—கவிராக்ஷஸ ஸ்ரீ கச்சியப்பமுனிவர்.

# குறிப்புரை முதலியன

**விநாயகர்வணக்கம் :**

பேறு ஆய - முத்திப்பயனாகிய. கீரன் - நக்கீர தேவர். முருகாறு - திருமுருகாற்றுப்படை. பெருகு ஆறு - பெருக்கெடுத்தோடும் ஆறுபோல்வதாகிய நூல் என்க. பேர் அருணகிரி - பெருமையுடைய அருணகிரிநாதர். அவத்து உறும் ஆசை - வீணாகிய ஆசை. ஏறு ஆய வாகனக் கடவுள் - இடபவாகனத்தையுடைய சிவபெருமான். மைந்தன் - குமாரன். செய்கை - சேயூர்; மரூஉ. பிள்ளையங் கவிதைநூல் - பிள்ளைத்தமிழ். தொழுமாறு - தொழும்படி. ஆயிரத்துமுகம் உடையது கங்கை. கங்காநதிக்கு ஆயிர முகம் இருப்பதாகக் கூறுதல் மரபு. இதனை, ' கங்கை துறைகொ ளாயிர முகமும் சுழல" (கல்லாடம்); "ஆயிர முகத்து நதி பாலனும்" (வேளைக்காரன் வகுப்பு); "ஆயிர முகக் கங்கை" (முத்துக்குமார - பிள்ளை) காண்க. பின் இரண்டடிகளில் பாரதத்தை வியாசர்சொல்ல மகாமேருமலையில் விநாயகர் மருப்பால் எழுதிய வரலாறு குறிக்கப்பட்டுள்ளது. பந்த வேதம் - சாகைகளையுடைய வேதம் என்றபடி. இலக்கத்து இருபத்தையாயிரம் சுலோகம் பாரதம் என்பர். மருப்பு நுதியால் என மாறுக. வாரணம் -

யானைமுகக்கடவுள். நூபுரம் - காலணி. பாரதத்தைக் கொம்பின் நுனியால் எழுதிய வரலாறுகள்: "நீடாழியுலகத்து மறைநாலொ டைந்தென்று" என்னும் வில்லிபாரதக் காப்பாலும், அருணைக் கலம்பகத்துக் காப்புச் செய்யுளானும் அறிக.

**1. காப்புப்பருவம்:**

*1.* உயிர்த்துடையாள் - பெற்றுள்ள நாயகி, மூலைத்தலை: தலை ஏழனுருபு. குருந்து - குருத்து; ஈண்டுக் குழந்தைப்பருவத்தை. குருந்து திலகம் ஆர் கடம்பு அரசு என மரப்பெயர்கள் தொனிப்பது காண்க. விலகும் - விட்டுவிட்டுப்பிரகாசிக்கும். கமலை - இலக்குமிதேவி. பரிதி - சூரியன்போலும் சக்கரப் படை. மதி - சந்திரன்போலும் சங்கம். பரிதி, மதி: உவமவாகுபெயர். பல கம் ஆர் - பல தலைகள் பொருந்திய: ஆயிரந்தலை என்றபடி. படி - பூமி. பாப்பு அமளி - சேடசயனம். பாப்பு: வலித்தல். அமளி - படுக்கை. விழிவளரும் - யோக நித்திரை செய்தருளும். கார்க்கடல்மேனி - கரிய கடல்போலும் திருமேனி.

முடிபு: குருந்தை, அரசை, தெய்வசிகாமணியைக் கார்க்கடல் மேனியன் புரக்க.

*2.* கடம்பன் - கடப்பமலர்மாலையையுடையவன். புங்கவர் - தேவர். போர் - யுத்தம். கஞ்சன் - (கரமாகிய) தாமரைமலரை உடையவன். கானாறு - காட்டாறு; கான் நாறு எனப் பிரித்தும் பொருள்கொள்ளலாம். கயற்பா-கயல்மீன்களின்பரப்பு. குரம்பு - வரம்பு; கரை.

பாலி - பாலாறு. திருத்தாதை - தமப்பனாகிய சிவ பெருமான்.

முடிபு: திருத்தாதை கடம்பன்றனை, கஞ்சனை, பரங்குன்றனை, பால்வாயனை, கந்தனை அளித்தாளும்.

3. மகரம் - சுறுமீன். சத்தி - வேலாயுதம். வடவரை - மேருமலை; இமயம் எனினுமாம். நீபன் - கடப்ப மாலையை யுடையவன். இறையவர் பொருள் - இறையனார் களவியல். அகிலம் - எல்லாம். அனலி - அக்கினி. சுவாகாதேவியினிடத்து ஒரு கற்பத்தில் தோன்றியவர் எனக் குறித்தபடி. கிரிவிலின் வலவர் - மேருவில்லை வளைத்த வல்லவர்: சிவபெருமான். முளரி - அக்கினி.

முடிபு: வீரனை மார்பனை அறுமுகனை நீபனை தூயனை மூலனை குமாரனை நேயனை மகனை மருகனை ஆள்பவள் முத்துவாளியே.

4. முதிய - பழமையான. திரிபுவன பதவி - சுவர்க்க மத்திய பாதலங்கள். முனிவர் - கபில முனிவர். முனிவின் - கோபத்தினால். எரி சகரர் - எரிந்து சாம்பலான சகரர்கள். விளையாட்டாக உமாதேவியார் ஒருகாலத்துச் சிவபெருமான் திருக்கண்களை இருகரங்களாலும் பொத்த, அதனால் உலக முழுவதும் இருளால் மூடி நித்தியகன்மங்களினின்று யாவரும் தவிர, இறைவர் தமது நெற்றிக்கண்ணைத் திறக்கவே அச்சத்தால் அம்மையார் திருக்கரத்தினின்று வழிந்த வியர்வை நீரே கங்கையாகப் பரவி ஓடியது என்பது கந்தபுராண வரலாறு ஆகலின், வியர்வில் ஒலிகெழுப் பூத்தவள் என்றார். இமகிரி -

இமயமலை. சதம் ஒருபது இலகு முகம் - ஆயிரமுகம்: இதனை விநாயகர் காப்பிலும் கூறியமை காண்க.

குழகர் - சிவபெருமான். சடில குல மவுலி - சிறந்த சடாமகுடத்தில். பதம் - திருவடிகள். விதி - பிரமன். விறல் - வலிமை. சிறுத்தாக்கன் - குட்டியருளியவன். உடுமகளிர் அறுவர் - கார்த்திகைப் பெண்கள் அறுவர். உவரி - கடல். வெயிலின் - சூரியனைப் போல; இன் உவமவுருபு. முருகவேள் மயிலின்மிசை விளங்கும் காட்சி கடலின்மிசை உதயசூரியன் எழுந்ததைப் போன்றது. "பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு..." (திருமுருகு) விமலர் - மலரகிதராகிய சிவபெருமான். ஒரு மொழி - பிரணவம். "மட்டவிழும், பொன்னங்கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப, முன்னம் பிரமமொழிந்தோனே" (கந்தர்கலிவெண்பா) தமிழ்த்தூக்கு - தமிழ்ப்பாட்டாகிய திருப்புகழ். வளவனகர் - சேயூர்.

முடிபு: முருகனைக் காக்க அரசிபதம் எடுத்தேத்துதும்.

5. மருவரு - மணம் மிகும். சுருப்பு ஒலி - வண்டுகளின் ஒலி. சுருப்பு: வலித்தல். கலித்த - தழைத்த. நீபன் - கடப்பமலர்மாலையை அணிந்தவன். வடபகிரதி - வடக்கண் உள்ள கங்கையாறு. கொடி - கொடிபோன்றவள். ஆகாரன் - திருவுருவத்தையுடையான். வரை பக - கிரவுஞ்சமலை பிளக்க. மகிதலம் - உலகம். மாங்கனியைப்பெற உலகத்தை ஒரு நொடியில் வலம்வந்தமை இதில் குறிக்கப்பட்டது.

பணிக்குலம் - பாம்புக் கூட்டம். அலைத்த - வருத்திய. போர் மா - போரைச்செய்யும் மயிலூர்தி. விபுதர் - தேவர். பூதேசன் - பூதங்கட்குத் தலைவன். விதி - பிரமன். இரணிய பொருப்பு - பொன்மலை: மேரு. மேருவில் பாரதகதை எழுதிய வரலாறு முன்னும் குறித்தார். பவளமலைபோலும் ஒளிவீசும் திருமேனியையுடையான். பால்போலும் வெள்ளிய மோதகத்தையுடையான். அளகை - குபேரபட்டணம். கனகப்பதி - பொன்னுலகம். நினைத்தது முடித்த யானை - சித்தி விநாயகர்.

முடிபு: கோமான் மகன், மூடிகன், பாரதன், மேனியன், மோதகன், யானை, காவலன் தனிபுரக்கும் என்க.

6. ஆலை - கரும்பாட்டும் இயந்திரங்கள். பொய்யா மொழி - பொய்யாமொழிப் புலவர். மலர்க்கமலம் - கமலமலர். கமலம் ஆட்டி - நீராட்டி: கமலம் - நீர்.

முடிபு: கமலம் ஆட்டி, கார்த்திகைப் பாலூட்டி, அம்புலியும் காட்டி, சுரும்பு ஓட்டி வளர்த்த சரவணம் அரசைக் குருந்தைப் புரக்க. அரசு, குருந்து என மரப்பெயர் தொனித்தல் காண்க. காலை, கடும்பகல், மாலை, வைகறை ஆகிய சிறுபொழுதுகள் வந்தன.

7. வஞ்சகர் அகம் - வஞ்சனையுடையார் நெஞ்சம். நிமலர் - சிவபிரான். கமலர் - பிரமர். நீப மாலிகை - கடப்பமலர்மாலை. தரளம் - முத்து. வாள்நகைத் தோகையாகிய வள்ளிபாகனை என்க. தோகைக்கும் வள்ளிக்கும் பாகனை எனவுமாம். தோகை - மயில் போலும் சாயலையுடைய தெய்வயானையம்மை. நாக

கங்கணம் - பாம்பாகிய கங்கணம். ஞாளி - நாய். குவலயப்பிதா - பிரமன். தலைக்கலம் - தலையாகிய பாத்திரம்: பிரமகபாலம். இடித்துடிக் குரல் - இடியினது ஒலியினையுடைய உடுக்கையின் ஒலி. கலை துறந்த - ஆடையில்லாத. மருங்கு - இடுப்பு. கரிய கஞ்சுகம் - திருமாலின் தோலாகிய சட்டை.

முடிபு: கஞ்சுகக்கடவுளே மைந்தனை, வைப்பவனை, மாலிகையனை, பாகனை, ஆள்பவனை ஆள்பவன்.

8. ஏடு - இதழ். உடு - நட்சத்திரம். மடவார் - பெண்கள். உடுமாமடவார் - கார்த்திகைப் பெண்கள். ஒரு இராசிக்கு இரண்டேகால் நட்சத்திரம் வீதம் கொள்க. அசுபதி 4, பரணி 4, கார்த்திகை 1 கால் மேடராசி; கார்த்திகை 3, ரோகணி 4, மிருகசீரிடம் 2 கால் இடபராசி என்னும் முறையில் காண்க.

முடிபு: உடுமாமடவார் ஈந்து இனிதிருப்பார், வகுப்பார், கொடுப்பார், புயனைப் புரப்பார்.

10. கடுத்த - ஒப்பாகிய. கடம் - மதசலம். அயிராவதத்தன் - இந்திரன். முதற்பதவி - முதலாகவுள்ள பதவிகள். மறம் - வீரம். எண்கணன் - பிரமன். ஓரெழுத்து - பிரணவம். பிரணவப்பொருள் கேட்கும் முறையைச் சிவபெருமானே ஆன்மாக்கள்பொருட்டுக் காட்டியருளினன் என்க. வேல்இலையில் தழைத்தெழு கற்பகம் என்றது ஒரு நயம். வேல், கற்பகம் மரப்பெயர்.

முடிபு: ஓரெழுத்தின் பொருள் தெய்வமுளையை, கற்பகத்தை, வாகனனைப் புரக்க.

2. செங்கீரைப்பருவம்:

1. வேய் - மூங்கில். வெற்பு - மலை. வீழ்கின்ற - விரும்புகின்ற. வெள்ளம் - நீர். வேரி தமாலம்- வாசனையுடைய பச்சிலை மரம். சாரல் கலங்கு அருவி - சாரலினிடத்திலே கலங்குகின்ற அருவி என்க. வச்சிரக்குவை - வைரமணியின் குவியல். உழுவை - புலி. மரை - மான்வகையில் ஒன்று. இரலை - மான். அரி - சிங்கம். வழுவை - யானை. வருடை - ஆடு. தாய் - தாவுதலைச்செய்து. ஆறும் மூன்றும் ஆம் - ஒன்பது வகை இரத்தினங்களாகிய. உததிப் பெருக்கு - சமுத்திர வளப்பம். துரக்கும் - ஓட்டுகின்ற. சுரிமுகம் - சங்கு. திரை - அலை. கரைப்புறம் - கரையினிடம்: புறம் ஏழனுருபு. சேயாறு, பாலாறு என்பன நதிகள். கேயூரம் - வாகுவலயம்.

முடிபு: மேகத்து வாய் வெள்ளம், பரந்து, இளைத்து, புதைத்துச் சிதைத்துச் சுமந்து, வழி(யே) போய்த் துரக்கும் பெருக்கம் இது எனப் பெருகும் சேயாறு பாலாறு செறி வளநாட செங்கீரை யாடியருள்.

2. இந்து ஊர் வரை - சந்திரன் ஊர்ந்து செல்லும் மலை. கலோலம் - கடற் பெருந்திரை. எதிரும் - எதிர்ந்துசெல்லும். திமிங்கிலகிலம் - திமிங்கிலத்தையும் விழுங்கும் மீன். இகலி - மாறுபட்டு. பொர - போர் செய்ய. கொந்து - கொத்து. மவுலி - கிரீடம். குரைப்பு - ஒலி. வெடிதர - வெடிக்கும்படி. கிணச்சுறவு - கொழுப்பை உடைய சுறாமீன். நந்து - சங்குகள். அகில் - அகிற்கட்டை. சந்தனப்பிளவு - சந்தனமரத் துண்டு. பவளக்குவால் - பவளக் குவியல். நித்திலம் -

முத்து. இப்பி - முத்துச்சிப்பி. நரலை - கடல். திருவாவினன்குடி - பழநி: திரு ஆ இனன் குடி - இலக்குமி, காமதேனு, சூரியன் இவர் பூசித்த தலமாதலின் அப்பெயர்த்து.

முடிபு: வரைக்குழாம் எதிர்கின்றது என்ன எதிரும் திமிங்கிலம் திமிங்கிலகிலம் போதலும், குரைப்பென வெடிதர, சுறவெலாம் ஏற, ஓடும் செந்தூர! பெயஞர! செங்கீரையாடியருள்.

3. சதகோடி - நூறு முனைகளோடுகூடிய வச்சிராயுத்தையுடைய இந்திரன்; அன்மொழித்தொகை. கற்பகாடவி - கற்பகச்சோலை. அடவி - காடு. பிணங்கும் - மாறுபடும். ஆரம் - சந்தனம். பனிச்சாரல்வாய் - குளிர்ந்த சாரலினிடத்து. அலைக்கு ஓடு - கடலுக்கு ஓடுகின்ற. பொரு உந்தி - மோதிச்செல்லும் ஆறு. கிராதர் - வேடர். அரிவையர் குழாம் - பெண்களின் கூட்டம். கலைக்கோடும் - பிறைச்சந்திரனுகிய கொம்பும். முக்கட அசலக் கோடும் - மும்மதங்களையுடைய மலைபோலும் யானையினது கொம்பும். சிலைக்கோடு - மலைச்சிகரம். செங்கோடை - திருச்செங்கோடு என்னும் தலம்.

முடிபு: சாரல்வாய் உந்திதிரிய, திரிதர, புரக்க, அவிழும் தாரை பொங்கி இழிந்து ஓடு செங்கோடை.

4. மகோததி - கடல். புரிசை - மதில். மேகத்து வாகனன் - இந்திரன். புதல்வன் - மகனுகிய சயந்தன். காவலன் - சூரபன்மன். கடைக்காலை வேலை - ஊழிக்

காலத்து உண்டாம் பிரளயம். கரித்தேவி - தெய்வ யானையம்மையார். ஆறு மீனப் பூவையர் - கார்த்திகைப் பெண்கள் அறுவர். புனற் கொழுந்து - வாயூறல்.

முடிபு: திறப்ப, திறப்ப, திறப்ப வேலை எழுநாள் புணர்முலையும் படாமுலையும் திறப்ப ஒழுகு, வாய் திறந்தழும் மதலாய்.

5. கறைஅடி - உரல்போன்ற கால். உடு - விண்மீன். கார் அரா - ஆதிசேடன். தறை (தரை) - பூமி. தெருமர - சுழல. சக்ரபூதரம் - சக்ரவாளகிரி. தமரம் - ஒலி. மூது அண்டக்கடாகங்கள் தப்ப என்க. தயித்தியர் - இராக்கதர். தருக்கு - செருக்கு. சிகழிகை - மாலை. சசி நாயகன் - இந்திரன். சசி - இந்திராணி. கவிர நிற நவிரம் - முள்ளுமுருக்கம்பூவை ஒத்த நிறத்தையுடைய உச்சி. கவிர் - முள்ளு முருக்கை. நவிரம் - உச்சி.

முடிபு: திடுக்கிட, கிழிய, கலங்க, உதிர, சுழல, பெயர, தெருமர, நெளிய, தப்ப, இரைதர, பதம்பெற, சிறையடித்துக் கூவு சேவற்கு இறைவ.

6. புவி - பூமி. சடரம் - வயிறு. நாபிப்புலத் தாமரை - உந்தித்தாமரை. தலைமகன் - திருமால். தனிப்பரம்பொருள் - ஒப்பற்ற மேலான பிரணவப் பொருள். கடலை குடித்தோர் - அகத்திய முனிவர். கடுவேகுடித்தோர் - சிவபிரான். கடு - ஆலகாலவிடம்.

7. அக்கு - எலும்புமாலை. நச்சு அரா - நஞ்சையுடைய பாம்பு. மிடற்று ஆலம் - கண்டத்திலே

பொருந்திய ஆலகாலம். ஆறு - கங்கை நதி. மதிக் கூறு - பிறைச்சந்திரன். தோட்டுக்கடி - தோடாகிய ஆபரணம். தோட்டுக்கு அடி - தோட்டினைச் செருகு வதற்கு. அடி - பாதம். நளினம் - தாமரை. ந(வ்)வி - மான். நவியம் - மழு. நால் அடி துடி - தொங்கும் அடியினையுடைய உடுக்கை. கொடுவரி - புலி. வாதாடு - காளியுடன் சண்டதாண்டவம் செய்தற்கு.

8. மேதி - எருமை. கடைசியர் - உழத்திகள். கடையர் - உழவர், மள்ளர். கம்பு ஆயம் - சங்குக் கூட்டங்கள். அறுபத ஞிமிறுகள் - ஆறுகால்களை யுடைய வண்டுகள். சகரர் கைதொடும் மடு - சாகரம்; கடல். வாவி - குளம். திரைசையர் - சோழர்.

9. குவை தரு துகிர் - குவியலாகப் பொருந்திய பவளம்; குமரவேள் செந்நிறமேனியுடையவர். குன்று ஏய் நம் குழகர் - கயிலைமலையின்கண் வீற்றிருந்தருளும் சிவபெருமான். கன்று ஏய் அம் சுவை தரு மழலை என்க. தொடு பரிபுரம் - அணியப்பெற்ற சிலம்பு. பண்டு அவை தரும் முனிவரும். சிவை - உமா தேவியார். அமுது அலை எறி.

முடிபு: குன்றே! கன்றே! எந்தாய்! வந்தாய்! நின்றாய்! வாயா.

10. உடுகுலம் பூ, முகில் கா. உடு - நட்சத்திரம். முகில் - மேகம். கா - சோலை. அளி - வண்டு. சத தள மலர் - நூற்றிதழ்த் தாமரை.

### 3. தாலப்பருவம்:

1. பரவை - கடல். இதழி - கொன்றை. சிகரம் - உச்சி. திகிரிக்கிரி - சக்க்ரவாளகிரி. திசையிற்கிரி -

எண்டிக்கிலும் உள்ள மலைகள். இரிய - கெட்டோட. சேடர் - ஆதிசேடன். படாடவி - படக்காடு; என்பது ஆயிரந்தலைகளை. தகர - சிதைந்து கெடும்படி. தகரேறு - ஆட்டுக்கிடாய். சமரம் - போர்.

2. வாள் கண். சங்கு நெற்றி. கொடிவள்ளை காது. வள்ளப்பவளம் வாய். வால்வளை கழுத்து. கிளை (மூங்கில்) தோள். குரும்பை தனம். வடம் (ஆலிலை) வயிறு. படம் அல்குல். தூசு ஆளும் கொம்பு - ஆடை அணிந்த இடை. அரம்பை (வாழை) தொடை. அலவன் (ஞண்டு) முழந்தாள், அம்புயம் (தாமரை) கரம், தாள். கனல் ஒறும் என்பு - மயிலாப்பூரில் எலும்பைப் பெண்ணாக்கிய வரலாறு சிந்திக்கத்தக்கது. மகன்மைநோக்கி ஞானசம்பந்தப் பிள்ளையாரை முருகவேளாகக் கூறினர். கவி - பூம்பாவைத் திருப்பதிகம். தொங்கல் - மாலை, தொடி - தோள்வளை. சிறுமுறுவல் - புன்சிரிப்பு; மந்தகாசம். அரைவடம் - அரைஞாண்.

3. துயில் - தூக்கம். பெடை - அன்னப்பேடு. ஒருவி - நீங்கி. மறுகு - தெரு. கஞல - நெருங்க. கழனித்தலை - வயலில்; தலை ஏழனுருபு. களி அன்னம் - களிப்பையுடைய ஆண் அன்னம். வாலைக் கமலத்தவர் - பாலப் பருவத்தையுடைய இலக்குமி தேவியும், சரஸ்வதிதேவியும். அறச்சாலைத் தலைவி - காஞ்சியில் முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்த உமாதேவியார்.

4. பகிரதி - கங்கை: ஆயிரமுகக் கங்கையாகலின் செவ்விமுகப் பனிமதி மண்டலம் ஆயிரம் என்றார்.

கொண்டல் - மேகம். தாய் ஆறும் என்றது கார்த்திகைப் பெண்கள் அறுவரை.

5. கைத்தடி - சிறுகோல். உறி - உறியின்கண் ஆய்ச்சியர் வைத்துள்ள. புரைக்கால் வழி - துளையின் வழியே. ககனம் - ஆகாயம். குமுதம் - செவ்வல்லி மலர். கோவியர் - இடைப்பெண்கள். இரு காவி - இரண்டு நீலோற்பலம் போன்ற கண்கள்; உவமையாகுபெயர். அடிபட்டவர் - கண்ணபிரானாகிய திருமால். தங்கை - உமாதேவியார். குயம் - தனம். மாறு அடிபட்டவர் - பாண்டியன் கைப்பிரம்பால் அடியுண்ட சிவபெருமான். தத்து அடி - தவழ்ந்து செல்லும் திருவடி.

6. ஈர மனத்தவர் - அன்புள்ள உள்ளத்தவர். ஏமபுரம் - பொன்னுலகம்: ஏமம் - பொன். ஆனமே - அழியாமல். சூர் - சூரபன்மன். சோரி - குருதி. நாகு - சங்கு. ஊர் - ஊர்ந்துசெல்லும். ஆரம் - முத்து. கழி - உப்பங்கழி; சேயூர் கடலையடுத்ததாகலின். நோய்வாய் எனவும் பாடம்.

7. கரன் - கரதூடணர்களுள் ஒருவன். இவன் விசிரவசு முனிவன் புத்திரன். சூர்ப்பனகை ஏவலால் காட்டில் இராமலக்குமணரை எதிர்த்து இறந்தவன். திரிசிரன் என்பவனும் இவனுடைய சகோதரனே. தோள் - வெற்பு. இருபானன் ஆனன் - இராவணன். மான் ஆனன் - மாயமானகிய மாரீசன். வேலை உரம் - கடலின் நடுவிடம். கோல் - அம்பு. சாறு - கருப்பஞ்சாறு. ஆலை - கரும்புயந்திரம்.

8. வருணனுக்கு உலகம் - கடல். கயல் களித்து உகள: உகள - புரள. வய மருப்பு - வலிமையுள்ள

கொம்பு. கருணை முக்கரடம் - கன்னமதமுதலிய மூன்று மதச்சுவடுகள். கரட - மதச்சுவட்டினையுடைய. கதலி - வாழை. பல குவை - பல குவியல்கள். அளறு - சேறு. துவைத்து - மிதித்து. தருணம் - இளமைப் பருவம். சயில புத்திரி - மலைமகளாகிய உமாதேவியார். சலதி வட்டம் - கடல்சூழ்ந்த உலகம். நெட்டவுணர் - மிக்க அசுரர். அருண அ பரிதி - மிக்க சிவப்பையுடைய அழகிய சூரியன்.

*9.* மடு உழக்குவன எனப் பாடம் திருத்துக. வளை - சங்கு. வளி - காற்று. தொடை - மாலை. எழிலி - மேகம். கமுகு - பாக்குமரம். அளகை - குபேரனது நகரம்.

முடிபு: முட்டுவன நெருக்குவன உழக்குவன கலக்குவன வணக்குவன துரத்துவன எற்றுவன எழுப்புவன விழுத்துவன வெருட்டுவன தத்துவன இறக்குவன எட்டுவன அலக்குவன மொத்துவன ஆகிய சேல்.

*10.* ரவிக்கிரணம் - சூரியகிரணம்; இளமரப் பொழில். பமரவர்க்கம் - வண்டுகளின் கூட்டம், பமரம் - பிரமரம் என்பதன் மரூஉ. மலகரி: இது தேவ ராகம் முப்பத்திரண்டனுள் ஒன்று. உரக படம் - ஆதிசேடனுடைய படம். தமரம் - ஒலி. படுகர் - பள்ளம். சுரிமுகம் - சுரிந்த முகம். தரளம் - முத்து. எக்கர் - குவியல்

*4.* **சப்பாணிப்பருவம்:**

*1.* பணிராச ராசன் - ஆதிசேடன். மகுடப் பந்தி - மகுடங்களின் வரிசை; அவை ஆயிரம். திசைத் தந்தி - திக்கு யானைகள். பருப்பதம் - மலை. சூர்

அங்கமாகிய மா. ஆழி - சூரியன். வரைக்கு அரசு - இமயமலை யரையன். ஆயிர முகப்பாணி - ஆயிர முகங்களையுடைய கங்கை. பாணி - நீர். சூலப்பாணி - சிவபெருமான். உவகை குமார. கரகபாணி - பிரமன். கரகம் - கமண்டலம். பாணி - கை. 'முன் கரக பாணிக்கு முடியுடையப் புடைக்கும் வீரன்' என்றது "படைப்போன், அகந்தையுரைப்பமறை யாதியெழுத் தொன், றுகந்த பிரணவத்தின் உண்மை - புகன்றிலை யால், சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ஙன் என்றுமுனம், குட்டிச் சிறையிருத்தும் கோமானே" (கந்தர்கலிவெண்பா) என்பதை நினைப்பிக்கின்றது. சாரங்கபாணி - திருமால். சாரங்கம் - வில். சத்தி - வேலாயுதம். சேவல்பாணி - குக்குடத்துவசமேந்திய கரம்.

2. வங்கம் - மரக்கலம். மாவின் கனிக்கு ஆவலாய். துங்கம் - தூய்மை. திருக்கூடல்ஆடு இறைவனார் - நான்மாடக்கூடலாகிய மதுரையில் கான்மாறியாடிய தமிழ்ச்சொக்கேசர். அவர் சொற்ற பொருளிலக்கணம் இறையனார் களவியல். துறை - அகப்பொருட்டுறைகள். புலமைத்தலைவர் என்றது முருகவேளின் அம்சாவதாரமாகவுள்ள உருத்திரசன்மரை. ஏழேழில் நன்மை உரை - நாற்பத்தொன்பதின்மர் செய்தவுரைகளில் சிறந்தவுரை.

3. வெண்தரள பந்தி-வெள்ளிய முத்து வரிசை. பெருமுத்து உகுத்த வெண்சங்கு. கவிழ்த்தபரிசில் - கவிழ்த்த தன்மைபோல. துரக்கின்ற - செலுத்துகின்ற. கொள்ளைக்குளம் - மிக்க நீர்நிலை. கருப்படவி - கருப்பஞ்சோலை. சாலி - நெல். தாழை - தென்னை.

4. பரவை - கடல். கலாபம் - தோகை. நின்று அகவி. நேமிவாளவட்டம் - சக்கரவாளகிரி. நாகம் எட்டு - அட்டவெற்புகள். நாகம் - மலை. மதநாகம் - திக்கு யானைகள். பணமவுலி நாகம் - பாம்பு; அட்டமா நாகங்கள். 'நாகம் விண் குரங்கு புன்னை நற்றாசு மலை பாம்பு யானை' என்பது நிகண்டு. முதுகிட - புற முதுகிட்டோட. சாபத்தொடு எழுகின்ற கொண்டல் - இந்திரவில்லோடு தோன்றும் மேகம். நிழலே கவிப் பக் கலாபம் பரப்பி, அகவி, வாய்க்கொண்டு, முதுகிட உதிர உதறியும் கொண்டலைக்கண்டு தாளவட்டமிடும் மாயூரம் என்க. கொண்டல் - மேகம். மாயூரம் - மயில். அகவி - கூத்தாடி. மயில் கொண்டலைக்கண்டு நடித் தலை, ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் "என்னை யூர்ந் தருள் சுடர்வடி யிலையவேற் பெருமான், தன்னை நன்மரு கெனப்படைத் தவன்றன தூர்தி, அன்ன தாமெனும் கேண்மையான் அளிமுகிற் குழாத்தைக், கன்னி மாமயில் காண்டொறும் களிசிறந் தகவும்" எனக் காஞ்சிப்புராணத்தில் அருளினர்.

5. பரவர் - மீன்பிடிப்போர். உவரி - கடல். ஊருழை: உழை ஏழனுருபு. கரைத்தலை: தலை ஏழ னுருபு. அந்தி - மாலைப்பொழுது. கப்பு - கிளை. முத்துப்போன்ற அரும்பினையுடைய. கைதை-தாழை. எங்கள் மகவு உங்கள்கை அடைக்கலம். மெய் - உடம்பு. பாணி மஞ்சனம் - திருமஞ்சனம். பரவர் பேதையர், அடைக்கலம் ஆகையால் மஞ்சனம் இடு மின் வெண்ணீறு இடுமின் திலக்காப்பு இடுமின் முத்தம் கொடுமின் எதிருமின் அழைமின் கொட்டு மின் எனும் செய்கை. திலக்காப்பு - திலப்பொட்டு.

பரவர்பேதையர் குழவியைப் பாராட்டுதல் இந்நாளில் நம் பேதையர் சிந்திக்கத்தக்கது.

6. மதகின்கண் ஓடி. கண்டல் - தாழை. தண்டலை எனப் பாடங்கொண்டு சோலை எனப் பொருள் கூறினுமாம். கனலி - அக்கினி, "தீக்கடவுள், சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்பப் - போதொருசற், றன்னவளும் கொண்டமைதற் காற்றாள் சரவணத்தில், சென்னியிற் கொண்டுய்ப்பத் திருவுருவாய்" (கந்தர் கலிவெண்பா) என்பது இப்பகுதியை உணர்த்தும், கண்டல் நெய்தல் நிலத்தும், தண்டலை மருத நிலத்தும் எனக்கொள்க. பதம் - வேத உறுப்பு. பசுந் தாமரைத் தொட்டில் - இளந்தாமரை மலராகிய தொட்டில். சதகோடி பானு - நூறுகோடி சூரியர்.

7. பௌவம் - கடல். கடலொடு கலவாதது வைகைநதி. கவுரியன் - பாண்டியன், முனிவு - கோபம். கடு - நஞ்சு. காயத்துளார் - உயிர். காயம் - உடம்பு. வேம் என்பினுக்கும். சுருதி அடவி - திருமறைக்காடு. திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் அருளிய அற்புதச் செயல்களை முருகவேள்மேல் ஏற்றிக்கூறினர். இவ்வாசிரியர் கருத்து முருகக்கடவுளின் அவதாரமே திருஞானசம்பந்தர் என்பது. "பெம்மான் முருகன் பிறவான் இறவான்" என அருணகிரிநாதர் குறித்தலின் எவ்வாற்றானும் முருகக்கடவுள் ஞானசம்பந்தராகார். திருத்தொண்டர் புராணம் அருளிய சேக்கிழார் சுவாமிகள் யாண்டும் இவ்வாறு கூறுமையே சைவர்களுக்குரிய பெரும்பிரமாணமாம் என்க.

8. தரளம் - முத்து. முறுவல் - பல்: சிரிப்பு. சுதகம் - அமுததாரை. அகடு - வயிறு. பகடு - யானை.

பேய் - பூதகி. சிற்றிடையன் என்றது இடைக்குலத்து வளர்ந்த கண்ணபிரானை.

*9.* சலதி - கடல். படி - பூமி. மறமகள் - வள்ளியம்மையார். கயமகள் - தெய்வயானையம்மையார். அசலப்புதல்வி - மலைமகளாகிய உமாதேவியார். நிறதர வட தரளம் - நல்ல நிறம்பொருந்திய மேலான முத்துவடம். நிருதர் - அரக்கர். கிரிவில் - மேருமலையாகிய வில். திகிரியன் - திருமால். குலிசன் - இந்திரன். இரணியகருப்பன் - பிரமன். சகரமடு - கடல்.

*10.* வளைபடு கடல் - சூழ்ந்த கடல், சங்குகள் தோன்றும் கடல். திசைமுகன் - பிரமன். அவன் மகன் - அகத்திய முனிவர். கலம் - மரக்கலம். கண் தாமரை. அளிகுலம் - வண்டுக்கூட்டம்.

**5. முத்தப்பருவம் :**

*1.* நத்து - சங்கு. தளவு - முல்லை. கீரம் - பால். குந்தம் - குருந்தமரம். பொலிவாளாகிய சரசுவதி. கொழுநன் - பிரமன். துளவக்கோ - திருமால். சூதம் - மாமரம். பொருவோன் - சூரபன்மன்.

2. பழனம் - மருதநிலம். தளை-வயல். வெருண்டு - அஞ்சி. பணிலம் - சங்கு. தரளம் - முத்து. அனந்தற்கும் - ஆதிசேடனுக்கும். முராரி - திருமால்: முரன் என்னும் அசுரனைக் கொன்றவன். முத்தேவர் - அயன் அரி உருத்திரன்.

3. தவளம் - வெண்மை. பாவாய் குயிலே கிளியே கொடியே பணியே கண்மணியே பூவாய் என

இமயமலையரையன் புகழ. இளம்புதல்வி - பார்வதி தேவியார் (உமை). கருணையலயன் - அருளுக்கு இருப்பிடமாகவுள்ளவன். சுருதி - வேதம். மூவாமுதல் - அழியாத முதல்வனே.

4. குவடு பொர - மலை போர்செய்ய: மோத என்க. நிலத்து அகழி. நிற்றம் புலரி எழுப்பி - நாடோறும் விடியற்காலத்திலே எழுப்பி. நித்தம் என்பது நிற்றம் என எதுகைநோக்கி நின்றது. புரி - நகரம். புரிசை - மதில். ஆவணம் - கடைத்தெரு. காவணம் - நடைப்பந்தர். கரையேறிச் சங்கமெலாம் பிறங்கிட்டு அதிரும்.

5. குஞ்சரம் - யானை. நனை - அரும்பு. போது - மலரும்பருவத்தரும்பு. இலவு - முள்ளிலவின்காய், விழி - வீழிப்பழம், நிவக்கும்-உயர்ந்த. குலிகக்குழம்பு- சாதிலிங்கக்குழம்பு.

6. எஞ்சா முகிற்குள் - குறைவுபடாத ஏழு மேகங்களுள். இரண்டுமுகில் - சம்வர்த்தம், புட்கலா வர்த்தம். இருமுகில்களும் பாற்கடலையும் தேன்கடலையும் மொண்டுபெய்ய, திருமாலாகிய ஏனம் உழுத அண்டமாகிய வயலுள் வேதச்சுவையாகிய கரும்பை நட்டு, அந்தக்கரும்பு வளராநிற்க, பிறையாகிய அரிவாள் கொண்டு இறைவன் அறுத்துவிட அதனை எடுத்துச் சூரியன் மேருமலையாகிய செக்கிலிட்டு அட்டதிக்கு யானைகளை அதிற்கட்டி ஆட்ட, அதனினின்றும் ஒழுகுகின்ற இனியசாறு போன்ற மழலைச் சொற்களைச் சொல்லும்வாய் என்க. நறை - வாசனை, தேன். மௌலி - கிரீடம். பஞ்சாயுதன் - சங்கு சக்கரம்

வில் வாள் கதை என்பனவற்றையுடைய திருமால். கேழல் - பன்றி. பழனம் - வயல். "வையமுழுதும் உழு துண்ண வல்லாறகளித்தும்" என்பர் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள். பணைத்து - செழித்து. பிறை வாள் - பிறையாகியவாள். வெய்யோன் - சூரியன்.

7. காம்பு - மூங்கில்; தோள். கடவுட்கமலம் இரண்டு - தெய்வத்தாமரைக்கரமிரண்டு. கஞலும் - விளங்கும். இருமுத்திருமேனி - ஆறு திருவுருவங்கள். பாம்பாலணைய அணை - ஆதிசேடனாகிய படுக்கை. "சரவணத்திற், சென்னியிற்கொண் டுய்ப்பத் திருவுரு வாய் - முன்னர், அறுமீன்முலையுண் டழுதுவிளையாடி, நறுநீர் முடிக்கணிந்த நாதன் - குறுமுறுவற், கன்னி யொடும் சென்றவட்குக் காதலுருக் காட்டுதலும், அன்னவள்கண்டவ்வுருவம் ஆறினையும்-தன்னிரண்டு, கையா லெடுத்தணைத்துக் கந்தனெனப்பேர்புனைந்து, மெய்யாறு மொன்றாக மேவுவித்துச் - செய்ய, முகத்தி லணைத்துச்சி மோந்து முலைப்பால், அகத்துண் மகிழ்பூத் தளித்து" (கந்தர்கலிவெண்பா). பாற்கடலோ கிடப்பது எனப் பால்மணக்கும் சரவணம்.

8. மரு வாய் - மணம் பொருந்திய. வனசத்திறை யவன் - பிரமன். வனசம் - தாமரை. புவனக்குருவாய் வருவார் - சிவபெருமான். குடிலை - பிரணவப்பொருள். கொற்றம் - வெற்றி. அருவாய் - உருவிலியாய்.

9. பூ மா - தாமரைமலரில் உள்ள இலக்குமி. மனை என்றது திருமகள் பாற்கடலில் தோன்றியமை பற்றி. அளறு - சேறு. புலவு - புலால்நாற்றம். உபய விட அரவம் - இராகு கேதுவாகிய பாம்புகள். முகில் -

மேகம். ஞிமிறு - வண்டுகள். முளரி - தாமரை. ஆமாவின் அவனை-சிவபெருமானை. கழை-மூங்கில்: மூங்கில் அடியில் தோன்றிக் காட்சிதந்தமையின் 'குழவி எனை உமிழ் கழை' என்றார். அடவி - காடு. ஆறாது - நீங்காது. யானை அறிந்தறிந்தும் பாகனையே கொல்லும் ஆதலின் 'ஆறாது மருவினவர் எவரெனினும் அவர் உயிரை அடுகரி' என்றார். இப்பாடலில் முத்துக்கள் பிறக்குமிடங்கள் பலவற்றைக் கூறியவாறு காண்க. "கொழுதி மதர்வண் டுழக்கு குழற் கோதைக் குடைந்த கொண்டலும் நின் - குதலைக் கிளிமென் மொழிக் குடைந்த குறுங்கட் கரும்பும் கூன்பிறைக்கோ, டுழுத பொலன்சீ றடிக்குடைந்த செந்தாமரையும் பசுங்கழுத்துக் - குடைந்த கமஞ்சூற் சங்குமொழு கொளிய கமுகு மழகுதொய்யில், எழுதுதடந் தோட் குடைந்ததடம் பணையும் பணைமென் முலைக் குடைந்த - இணைமா மருப்பும் தருமுத்துன் திருமுத் தொவ்வா..." (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்). சிப்பி, சந்திரன், மேகம், தாமரை, மூங்கில், யானைக்கொம்பு முதலிய இடங்களில் தோன்றிய முத்தங்கள் இங்கே ஒவ்வா எனக் கூறினார்.

10. பூ ஆதி உலகு - நிலவுலகம் முதலிய உலகங்கள். வத்திரம் - முகம். மகபதி - இந்திரன். போகாத திரு என்றது சுவர்க்க இன்பத்தை; உபசாரம். சத்திரம் - குடை. விடை வலவர் - இடப வாகனத்தை உடைய சிவபிரான். கிரி குமரி - உமாதேவி. அறுவகைமை லிபி - ஆறெழுத்து மந்திரம்; 'சரவணபவ' என்பது. மித்திரன் - அன்புடையான். மா - குதிரை. கரடம் - மதச்சுவடு. அனிகம் - சேனை. தேவாதிபதி குமரன் - இந்திரன் மகனாகிய சயந்தன். உறை சிறை.

6. வருகைப்பருவம்:

1. மிக்க ஏர்: தொகுத்தல். பகடு - எருமை. குருகு - நீர்வாழ்பறவை. இக்கு - கரும்பு. சுரிமுகம் - சுரிந்த முகத்தையுடைய சங்குகள். மழை - மேகம். கடையர் குழாம் - மள்ளர் கூட்டம். செய்கை: சேயூர் என்பதன் மரூஉ. பெருமாள் - பெருமையை ஆள் பவன்.

2. பம்பு - ஆரவாரம். கழி - உப்பங் கழிகள். செழிய வித்தி - செழிக்கும்படி விதைத்து. பகடு - எருமை. கண்டகம் - முள்வேலி. குறும்பு - குறுநில மன்னன். பரிசில் - ஆறிலொருகடமை. உம்பர்ப்புயல்- வானில் உள்ள மேகம். வேட்டு - விரும்பி. உமணர் - உப்புவிளைப்பதோர்சாதியார். உப்பினம்பாரம்வெள்ளி மலைக்கும், செந்நெற்குவை மேருமலைக்கும் உவமை. புரம் - நகரம். "வேதண்ட, மொப்பவுயர்த்த வுயருப்புக் குவான்மீது, வெப்ப மறுமதிய மெய்யுறிஞ்ச" என்பது சிவப்பிரகாசசுவாமிகள் நெஞ்சுவிடுதூது.

3. பரி - குதிரை. கரடம் - மதச்சுவடு. சுண்ணம் - சுண்ணப்பொடிகள்: அவை முத்துச்சுண்ணம், பொற் சுண்ணம் முதலியன. பிறங்கும் - விளங்கும். துகள் - தூசி. கார் அகில் ஆவி - கரிய அகிற்கட்டைகளைப் புகைத்தலால் உண்டாம் புகை என்க. குய் - புகை. துவசம் - பெருங்கொடி. பொதுளி - நிறைந்து.

4. ஆணிக்கனகம் - உரையாணிப்பொன். இவ் வாசிரியர் திருவாரூர் உலா 264-ம்கண்ணியில் ஆணிப் புதுக்கனகம் என்பர். திகிரி - சக்கரம். அருக்கன் -

சூரியன். பசுங்குதிரை - பச்சைநிறக் குதிரை. சூரியனுடைய குதிரை பச்சைநிறமுடையதெனவும், ஏழ் என்னும் பெயருடையதெனவும், எழுவகைப்பட்ட நிறமுடையதெனவும் கூறுவர். "பச்சை வாசிகளும் செய்யனவாக" (பாரதம் - காண்ட) "இலகொளிப் பரிதி நடவுமைம் புரவி யேழும்" (கூர்மபுரா - தக்கன் வமிச - 36) ஏழாகிய தொகைகொண்ட குதிரைகள் எனத் துணிவுறநிறுத்தினர் அதிவீரராமபாண்டியர். மற்றும், மண்டல அளவையுரைத்த அத்தியாயத்தில் "வேதச் சந்தசோ ரேழுமத்தேரினில் விசித்த, திதில் வாம்பரி யீரறு பருதியஞ் செல்வர்" எனவும், "அருமறையின், மயல்தீர் சந்தம் பிணித்த பசும் புரவி யேழும் வகுத்துரைக்கின" (இலிங்கபுரா - சூரியன் தேர்ச் சிறப்புரைத்த) எனவும், "தணிவிலோ ராழி வேதச் சந்தசோ ரேழு மேழும், பணிசெயப் பூண்ட பச்சைப் பரிதின கரன்தேர்க்கன்றே" (பாகவதபுரா - சூரியமண்டலமுரைத்த) எனவும், "சூரியனுடைய இரதத்திற்குக் காயத்திரி, பிருகதி, உஷ்ணிக், ஜகதீ, திருஷ்டுப்பு, அநுஷ்டுப்பு, பங்தி என்கிற வேதசந்தங்கள் ஏழுமே குதிரைகளாயிருக்கின்றன" (விண்டுபுராணம் - எட்டாம் அத்தி) எனவும் கூறியவற்றால் ஏழென்னும் தொகையே பல இடத்தும் நாட்டப்பட்டன காண்க. இதனால் சப்தாசுவம் என்னும் வடநூல் வழக்குப்பற்றி அப்பெயர் கொண்ட ஒருகுதிரை எனக் கொள்வார் மதம் மறுக்கப்பட்டது என்பர் ஸ்ரீ நா. கதிரைவேற்பிள்ளை. 'ஏழ்பரியோன்' என்பர் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகளும். அலங்கும் - அசையும். கூலமயிர்க் கற்றை - வால்மயிர்த்தொகுதி. வேணி - ஆகாயம். இறால் பொதுத்து - தேன்கூட்டைத் துளைத்து.

பாணித் துணை - இரு கரங்கள். பிணவுக்கு - பெண் மந்திக்கு. குருளை - குட்டி.

முடிபு: வானரங்கள் வெருண்டு, பறந்தெழுந்து விழும் தேனீக் கண்டு, இறால் பொதுத்து, பருகி, விடுத்து, கொடுத்து கழுவும்.

5. நிறை - கற்பு. அரிக்கண் - கருவரி செவ்வரி பரந்த கண்கள். நீலமும் கமலமும் பூத்த தடம். மாணிக்கப்பூண். கஞல - பரந்து தோன்ற. சிரல் - சிச்சிலிப்புள். குருகு - நாரை. போதா - பெருநாரை. தாரா - ஒருவகைப் பறவை. அரவிந்தம் - தாமரை. ஓதிமம் - அன்னம்.

முடிபு: மடமாதர் தடங்குடைய, விழும் மாணிக் கப்பூண், கனியென்னக் கஞல, கயல் கவரத் திரியும் சிரலும் குருகினமும் போதாவும் தாராத் தொகையும் கரை புகுதலும், பிறையோ முகிலிற் புகுவது என ஓதிமம் பொழில் புகுதும்.

6. பரம்பு - பரப்பு. பரவர் - மீன்பிடிப்போர். கழைத்தூண்டில் - மூங்கிற்கழியில் உள்ள தூண்டில். வெடிபோய் - துள்ளிச்சென்று. "வெடிபோய்க் கயல் பாய் பெரும்பணை" (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்). பரியசுறு - பெரிய சுறுமீன். நீலக்கயம் - குவளைமல ரோடை. கரும்பின் கரிய நிழலை நீரில் கண்டு அத் தூண்டில் எனக் கலங்கி ஓடும் சுறுமீன் என்க.

7. கன்னல் - கரும்பு. பொதும்பு - சோலை. இறால் - தேன்கூடு. முக்கனி - வாழை மா பலா. மடுப்ப - நிறைய. மேதி - எருமை. பிறையிரும்பு -

அரிவாள்; கூனிரும்பு என்றது போல. வருக்கை - பலா. போர் - நெற்போர். அளி அலம்பும் - வண்டு கள் ஒலிக்கும்.

8. குரை கழல் - ஒலிக்கின்ற வீரக்கழல். குவலயம் - பூமி. மலம் அற - ஆணவ முதலிய குற்றங்கள் நீங்க. அரைவடம் - அரைஞாண். பரிபுரம் - சிலம்பு. மறலி - இயமன். அலகை - பேய். வரை முகடு - மலையினுச்சி. மழையுடல் - மேகத்தின் அகடு. உரகம் - பாம்பு. மகிதலம் - பூமி. உடுக் குலம் - நட்சத்திரக் கூட்டம். தெருமர - சுழல. "அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி" (தொல்காப்பியம்). கடல் அகடு - கடலினது நடுவிடம். அமலைகள் பெருக எனப்பாடம் திருத்துக. அமலை - ஒலி.

9. உலவை - பிரசண்டமாருதம். வடகுவடு - மேருமலை; இமயமலை எனினுமாம். அருணம் - சிவப்பு. மணி கண கிரணம்-இரத்தினக்கற்களின் ஒளி. அயில்-வேலாயுதம். மரகத துரகம் - பச்சை இரத்தினம் போன்ற (மயிலாகிய) குதிரை. உகை - செலுத்து கின்ற. இரலை - கலைமான். வருடை - ஆடு. கவி - குரங்கு. பழம் நீ - பழநி. கழை - மூங்கில்.

10. கரி புரம் வெளிறு என்பதை வெளிறு புரக் கரி என இயைத்து வெள்ளையுடலையுடைய ஐராவத யானை எனப் பொருள் விரிக்க. மகபதி - இந்திரன். கன ககன பதி புகுத என மாறுக. கனம் - பெருமை. ககன பதி - விண்ணுலகம். எகினனர் - அன்னப்புள் வடிவாகிய பிரமதேவர். பரிபுரம் - சிலம்பு. பகிரதி - கங்கை. நயன பதுமம் - கண்களாகிய தாமரை. அரி புரம் - திருமாலுடைய திருமேனி.

## 7. அம்புலிப்பருவம்

1. சக்ரவாளம் - சக்கரவாளகிரி. தோகை வெம் பரி - மயிலாகிய விரும்பத்தக்க குதிரை. செண்டு வெளி - குதிரைவையாளி வீதி; குதிரை செலுத்து கவளசாலை - குதிரைப்பந்தி; உணவூட்டுமிடம். தறி - தூண். மதாணி - மார்பிற்பதக்கம்.

2. இரணிய கருப்பன் - பிரமன். வீடு - தாமரை மலர். தரணி - சூரியன். திருத்தணிகையில் முப்போதினும் மலரும் குவளைமலர். முரணிய - மாறுபட்ட. அரணியம் - (சடையாகிய) காடு. வெறுப்பு - செல்வம்.

3. இது, சாம பேத தான தண்டமென்னும் உபாயங்கள் நான்கனுள் சாமம் கூறும். சாமம் - ஒப்பு. கதிரவன் - சூரியன். புகர் - சுக்கிரன். மந்தன் - சனி. கங்கையில் தவழ்தல் இருவருக்கும் சமம்.

4. இதுவும் சாம உபாயம். மதன் - மன்மதன். கவிகை - குடை. சந்திரன் மன்மதனுக்குக் குடை. "சீறுமதன், விண்ணிற்குடையும் விடுதேரும்" (திருக் கழுக்குன்றத்துலா). நயனம் - கண். நாகநகரார்- விண்ணுலகவாசிகள். பதாதியர் - சேனைகள். அன்னசாலை என்றது தேவர்கள் ஒவ்வொருநாளும் ஒவ்வொரு கலையை அமுதாகப்பருகுவார்என்பது நூற்கொள்கையாதலின். இதனை, "தேயவும் பெருகவும்" என்னும் 6-ஆம் செய்யுளில் காண்க. மாமி - இந்திராணி: சசி என்னும் பெயருண்மையின். தாய்வடிவம் - மான். தொன்று தொட்டு - மிகப்பழமையாக.

5. சிறையுறைந்தவன் - பிரமன். கொடி - சேவலாகியகொடி. சூழி - முகபடாம். அத்திரி மகன் - அத்திரிமுனிவர் புத்திரன்; சந்திரன். "பத்திரட்டியில்... அத்திரிப்பெயரந்தணன் அம்பகந் தனிலும், சித்திரக் கனன் முகத்தினும் பிறந்தொளி சிறந்தோன்" (வில்லி பாரதம் - குருகுலச்). ஆழி - சமுத்திரம் இது. பேதப் படுத்திக் கூறியது.

6. செவ்வேள் - முருகக்கடவுள். சுரர் - தேவர். அரவு - பாம்பு (இராகு). தோகை - மயில். கிரி மத்து - மேருமலையாகிய மத்து. மதலையந்தாமன் - கொன்றை மாலையை அணிந்தவன் : ஈண்டுக்குறித்தது வீரபத்திரரை. அரண் - பாதுகாவல். இதுதானம் கூறியது.

7. உகந்து - விரும்பி. நீலக்கலாபம் - நீல நிறத் தோகை. மஞ்சு - மேகம். பொருப்பு - மலை. மாருதப் பூளை - காற்றிலகப்பட்ட பூளைப்பூ. வனசம் - தாமரை.

8. கூடல் மேலைப் பரங்குன்று - "மாடமலி மறுகிற் கூடற் குடவயின் ... குன்றமர்ந் துறைதலும் உரியன்" (திருமுருகு). முழை - குகை. முதற்கலை வாணன் - கடைச்சங்கப் புலவர்களில் தலைமைபெற்ற நக்கீரதேவர். ஆற்றுப் பாடலாம் முருகு - திருமுருகாற்றுப்படைநூல். அரா - இராகு. பகுவாய் - பிளந்தவாய். இடும்நாள்- கிரகணகாலம். கலைவாணன் - சந்திரன். கலை ஈண்டு அமிர்தகலை. நாமம் - பெயர். வரிசை - சிறப்பு. நளினம் - தாமரை. ஆடும்பரி - மயில். 'வேலும் மயிலும்' என்னும் குறிப்புக்காண்க. "ஆடும் பரிவேல்" என்ற கந்தரனுபூதியும் சிந்திக்கத்தக்கது.

9. மை ஓத வாரிதி - கரிய நீரையுடைய கடல். ஓதம் - நீர். செய்யோன் - செம்மையையுடையோன்.

அகளங்கன் - களங்கம் இல்லாதவன். துய்யோன் அலாமல் - பரிசுத்தனல்லாதவனாய். களங்கன் - குற்ற முள்ளோன். குருத்தோகை - குருவாகிய வியாழ பகவான் மனைவியின்; சந்திரன் குருபத்தினியைப் புணர்ந்த பாவத்தைக் குறித்தபடி.

10. தவிராத வெவ்வினை - நீங்காத கொடுந்துன்பம். முருகாறு - திருமுருகாற்றுப்படை. ஆறெழுத்து - சடாக்கரமந்திரம். இதனை 'நமோகுமாராய' என்று கூறுவர் நச்சினார்க்கினியர். 'சரவணபவ' என்னும் மந்திரமே சிறந்தது. மற்றும் சரவணபவ, சயிலொளிபவ, பரிபுரபவ, பவமொழிபவ, திகழொளிபவ, திரிபுர பவ என்னும் இந்தஆறெழுத்துக்களையும் சுப்பிரமணியர் விஞ்சைஎன்பர். இவைகளைமுறைப்படி செபித்துச் சித்தி பெற்றவரும் பலர். சுப்பிரமணியர் நாற்பத்து முக்கோணச் சக்கரத்திலே சுற்றிலும் உள்ள அறு கோணங்களிலே அடைத்து, மத்தியில் உள்ள அறு கோணத்திலே பீசாக்கரங்கள் ஆறனையும் எழுதிப் பூசித்தால் நல்ல சித்தியைத்தரும் என்பர்பெரியோர். விவரம் அறிந்தோர்வாய்க்கேட்டுச் செய்க.

## 8. சிறுபறைப்பருவம்:

1. வானாறு - ஆகாயகங்கை. கமுகு - பாக்கு. வருக்கை - பலா. இறால் - தேன்கூடு.

2. பைபிற்சுடிகை - படத்தின் உச்சிக்கொண்டை. ஆழித்தேர் - சக்கரங்கோத்த தேர். ஆழி - சக்கரம்.

3. நாகு இள மேதி-மிக்க இளமையான எருமை. கிடை - நெட்டி. அளம் - உப்பளம். கான்-கடற்கரைச்

சோலை. மூரல - சத்திக்க. வலம்புரி - வலம்புரிச் சங்கம். இனத்தளிகோடிகள் எனப்பாடம் திருத்துக. அளி - வண்டு.

4. கவுணியர் - கவுணிய கோத்திரத்தார். காதலன் - மகன். குவளைப்போது...தணிகை: "வைகல் தொறு மலர்மூன்று, கோலமார் காவி யுயிர்த்தலி னல்ல காத்திரி" (**தணிகைப்புரா - புராணவரலா** - 59), "கடவுட் சுனைக்குள் வளர்செய் கல்லார முப்போது மலர்தந்து கமழ்தரும்" (**திருத்தணிகைத் திருவிருத்தம்** - 4), "வெறிவீசு காவிமலர் மூன்றுநாளும் விரியும் விலங்கல்" (**திருத்தணிகைப்பதிற்றுப்பத்தந்தாதி** - 20). "காலை நண்பகல் மாலை முப்போதும், வைகல் வைகல் மலர் மூன்று தெரிக்கும், நீலப்பைஞ்சுனை" (**திருத்தணிகையாற்றுப்படை 224-6**) என்பன காண்க. சுடிகை - உச்சிக்கொண்டை. அருணன் - சூரியன்.

5. கரா - முதலை. ஓதிம சாலம் - அன்னக்குழு. கதிரின் பரி - சூரியன் தேர்க்குதிரைகள்.

6. பங்கம் - சேறு. பரிதித்திகிரி - சூரியன் போன்ற சக்கராயுதம். குருளை - குட்டி. களபத்திரள் - யானைக்கூட்டம். கொலிமலை - கொல்லிமலை.

7. களிறு - கஜேந்திரன். முதல் என - ஆதி மூலமே என. அவன் - திருமால். முதுமகள் - வள்ளி யம்மையார். முனிமொழி - நாரதமுனிவர் சொல். குருகுபெயர் ... வெற்பு - கிரௌஞ்சகிரி. நிலாமதி - பிறைச்சந்திரன். வயம் - வெற்றி. துரகம் - குதிரை. சலதி - கடல். அவுணத்தொகுதி - அவுணர்கூட்டம்.

திதலை - தேமல். சத்தி தர - வேலாயுதத்தைத் தரித்தவரே.

8. முறி - தளிர். கொக்குவனம் - மாந்தோப்பு. உததி - கடல். சுதை - அமுதம்.

9. கனலி தலைவி - சுவாகாதேவி. வெருவன்மின் - அஞ்சற்க. நளினன் - பிரமன். கதிர்க்கடவுள் வரவு அறி கொடி - சேவற்கொடி. குளம் - நெற்றி. குளவ - நெற்றிக்கண்ணில் தோன்றியருளியவரே; சரவணப் பொய்கையில் தோன்றியருளியவரே எனலும் ஆம்.

10. உரை விரி - கீர்த்தி மிக்க. விழுமியவர் - தூயோர். வழுவா – குற்றமில்லாத. வினைத்துரிசு - வினைகளின் பொல்லாமை. தமக்கு உறவின் அறுவர். நிருதர் - அசுரர். உதிரப்புணரி - குருதிக்கடல். நினைத்து அலகை நிறைகுலம் எனத்திருத்துக.

9. சிற்றிற்பருவம்:

1. கோவே - தலைவனே. குலிசன் - வச்சிராயுதத்தையுடைய இந்திரன்: குலிசம் - வச்சிராயுதம். கிளி குயில் மயில் அகலாக் கா என்றது நயம். கவுத்துவம்:பாற்கடலிற்றோன்றிய அதனைத் திருமால் அணிந்து கொண்டனர் என்பது வரலாறு. இம் முருகனாகிய கவுத்துவம் கடையாமலே பெற்றது. கோளரி - சிங்கம். மூன்றாவது அடியில் சிவபிரானுக்குப் பிரணவம் உபதேசித்ததை நினைப்பித்தார். கிளி என்றது வள்ளியம்மையாரை. குயில் என்றது தெய்வயானையம்மையை என்க.

2. கான் - வாசனை. திருத்தாய் - உமாதேவியார். மகராலயம் - கடல். வடவாமுகம் - வடவாமுகாக்கினி. கடல் கொந்தளித்து உலகை அழிக்காதபடி பெண் குதிரைவடிவாக நீரின் மேற்பரப்பில் உள்ளதென்பர். களிறு, மான் என உருவகித்தார். "தானே தனக்குச் சரியான தாயேவருக"எனப்பிள்ளையவர்கள் மங்களாம் பிகை பிள்ளைத்தமிழில் கூறியது இம்மூன்றுவது அடியை நினைந்தே போலும்.

3. வனசத்தவன் - பிரமன். உரம் - மார்பு. வனசம், பங்கயம், கமலம், முண்டகம் எனத் தாமரை யின் பெயர்கள் வந்தன. தாமரையில் தெருவிற் பொடி புகலாகாதென்றனர்.

4. உதய ஆதவன் - சூரியன். இமகரன் - சந் திரன். ஒருவன் என்றது திருமாலை. மழைவண்ணம் - மேகநிறம். பீடிகை விண்ணுலகம். சுதை - அமுதம். உரகம் - பாம்பு. பேரகம் பாதலம். பிரான் - பரமோப காரி.

5. உரும் - இடி. கடுக்கும் - ஒக்கும். மறுகுதல் - மனங்கலங்குதல். கறங்கில் - ஒலித்தால். அரைநாண், கிங்கிணி, சிறுசதங்கை, கடகம், தொடி என்பன ஆபரணப் பெயர்கள்.

6. உமாதேவியார் இழைத்த சிற்றிலை வருணித் தார்: கடல் உலை, வடவனல் தீ, சக்கரவாளகிரி அடுப்பு, மேரு கடம், வல்சி உடுக்குலம், கதிர் திரு விளக்கு, இந்திரனுலகமும் அளகையும் பசும்பொன் அறை, பாதலம் மாணிக்கப்பெட்டி, பகிரண்டங்கள் சிற்றில் என்க. கடம் - பானை. முற்றில் - சிறுமுறம்.

வல்சி - உணவு: அரிசி. முதிருங்கதிர் - பூரணசந்திரன். முகில் ஊர்தி - மேகவாகனம். மூதூர் - அமராவதி. அளகைப்பதி - குபேரன் நகரம். பணி - பாம்பு: பணம் - படம். இழைப்பாள் உமாதேவியார்.

7. நகை - விளங்கும். தரளத்திரள் - முத்துத் தொகுதி. சிறுகுழந்தைகள் சிற்றில் இழைத்தபடியைக் கூறுகின்றார். தரளம் அரிசி, தேன் உலை, சங்கு கடம், மாதுளை தீ, பவளம் விளக்கு. வதுவை - கல்யாணம். சிறார் விருந்து. முகை - மொட்டு. புண்டரிகம் - தாமரை. உரம் - மார்பு.

8. விரகு - தந்திரம். மாமன் - கண்ணபிரான். மேனாள் - முற்காலத்து. பொதுவர் - இடையர். குடவர் மடவார் - இடைப்பெண்கள். செய்யோன் - சிவந்த திருநிறத்தையுடைய சிவபெருமான்.

9. கவந்தம் - முண்டம். தகர் - ஆட்டுக்கிடாய். மருப்பு - கொம்பு. கழுநீர் - நீலோற்பலம்: செங்குவளை கருங்குவளை.

முடிபு : வாடுகைக்கும் மொழியினுக்கும் நிலைக்கும் கண்ணீர்க்கும் விரற்கும் இரங்காயோ.

10. கோளரிமாமுகன் - சிங்கமுகாசுரன். தாரகன் சூரபன்மன் தம்பி. 3-வது அடி பிரணவப்பொருளை முருகக்கடவுள் சிவபெருமானுக்கு உபதேசித்தமை குறித்தது.

10. சிறுதேர்ப்பருவம் :

1. வாடை - வாடைக்காற்று. வசந்தன்-தென்றல். கொண்டல் - கீழ்காற்று. கோடை - மேல்காற்று. பெருங்கால் - பெருங்காற்று. சலஞ்சலம், வலம்புரி.

2. துப்பு அளவும்: துப்பு - பவளம். தாலம் - பூமி.

3. பச்சிமம் - மேற்கு. கச்சிநகர் - காஞ்சிபுரம்: இவர் மாவடிக்கந்தர். நச்சி - விரும்பி.

4. மாமரம் கவிகை. கவிகை - குடை. கம்பன் - ஏகம்பநாதர், அருணம் - சிவப்பு. மயிலை - மயிலாப்பூர். பாவைத்திறம் தந்தநாதர் - காபாலீச்சுரர். ஒற்றியூர்த் தியாகர். வடாடவி - திருவாலங்காடு: வடம் - ஆல். வேதபுரி - திருக்கழுக்குன்றம். சுருதி - வேதம். வேத கிரீசர், நந்திகிரீசர், உருத்திரகோடீசர் என்பன தலப் பெயரோடு தொடர்புகொண்ட மூர்த்திகள். சம்பு ஆதி அபயன் குலிசன் மால் கமலனர் இவர் இத்தலத்துப் பூசித்துப் பேறுபெற்றனர்.

5. நிருதர் - இராக்கதர். குருதி - இரத்தம். கொண்டல் - மேகம். அண்டகூடம் - அண்டமுகடு. வேல் முருகக்கடவுள் ஏவல்செய்து திரும்பிய செய்தி.

6. உரகம் - பாம்பு; ஆதிசேடன். பௌவம்- கடல்.

7. மருதோய் - மணம்பொருந்திய. சுருப்பொலி - வண்டுகளின் ஒலி. பாரிடம் - பூதம். தானை - சேனை. முட்கோல் - தாற்றுக்கோல்.

8. செங்கோடை - திருச்செங்கோடு. வையகம் - உலகம். ஏரகம் - சுவாமிமலை. பழமுதிர்சோலை - திருமாலிருஞ்சோலை. (அழகர்மலை) என வழங்கும்.

9. வயப்பகடு - வெற்றியுடைய ஐராவதம். சேடாசலத்தகிரி - திருவேங்கடமலை.

10. பிறப்பாகிய இரவு. அருத்தி - விருப்பம்.

குறிப்புரை முதலியன முற்றிற்று.

---

